நாடிவந்திரிப்போழ்துநல்லசமயமில்லை
யாடிகழித்தாவணியஞ்சார்ந்தெய்தி யோடி. (௩௦௧)

யகத்தியமாய்வாருமமக்கச்சணமேசெம்பொன்
தகட்டங்கிசால்வைகளுந்தாரேன் விகற்பமின்றிப். (௩௦௨)

போய்வருவீரென்னப்புலவர்படபடத்தின்
றோய்வறநீர்சொன்னதொழுங்காமோ ஆயுங்கால். (௩௦௩)

நாளையென்பான்கொடையுநம்பிரலமில்லாக்
காளைபின்போனகனக்குழலும் பூளை. (௩௦௪)

திடலிற்குவித்தகுவையுமிம்மூன்றுங்
கடலிற்கவிழ்ந்தகலமா மிடருழந்த. (௩௦௫)

காலத்தாற்செய்தநன்றிசிறிதெனினும்
ஞாலத்தில்மாணப்பெரிதெனுமாப் போலுஞ். (௩௦௬)

தடையின்றியுங்கள்மனஞ்சந்தோஷித்தீயுங்
கொடைதனையேகொள்வேன்குணமா யடைவோர்க். (௩௦௭)

கெடுக்கணுற்றபோதிலுவந்தீயாதபேர்பின்
கொடுத்தென்கொடாமலென்னகூறும் படித்தவரே. (௩௦௮)

மாதயவுசெய்யுமென்றுமாறுதுரைக்கவவன்
வேதனையாயுள்ளமிகவருந்தி யேதுநம்மைச். (௩௦௯)

சும்மாவிடான்புலவன்றொந்தரவுக்கென்புரிவோம்
நம்மாலேயொன்றுநடவாதே யிம்மாற்ற. (௩௧௦)

மில்லவள்கண்டாலிவனையேனழைத்துவந்தாயென்
றெல்லையறப்பேசியிடிப்பாளே தொல்லைவினைக். (௩௧௧)

கென்செய்வோமென்றிங்கிருதலையாங்கொள்ளியினிற்
றுன்பெய்திவாடுஞ்சுழலெறும்பாய்ப் பின்புமன. (௩௧௨)

வூக்கமுடன்சென்றுமனையுள்ளாட்கெதிரினின்று
நாக்குளறிமெல்லநவிலுவான் பாக்யவதி. (௩௧௩)

சேதுசமஸ்தானஞ்சிறந்திடுகவீசுரர்சங்
கீதசாமித்யகலைக்யானமுள்ளோ ரோதும்ப்ர. (௩௧௪)

பந்தமொன்றுபாடியதிற்பாவாயுன்பேணாநல்லாய்
முந்திவைத்தென்பேணாமுகனைவைத்துத் தந்தியினும். (௩௧௫)

றம்புருவைமீட்டிச்சரளியொடுபெண்பலவுங்
கெம்பீரமாய்ப்படித்தார்கேட்டனையோ கொம்பனையாய். (௬௧௬)

ஏற்றமரியாதையவர்க்கீயா திருந்துவிட்டால்
மாற்றரியபொல்லாவசைபடிப்பார் போற்றுநம. (௬௧௭)

தைஸ்வரியமெல்லாமழிந்துகெடுவதன்றி
மொய்குழலாயாளுக்கேமோசம்வரும் தெய்வீக. (௬௧௮)

வாதிசராம்பாவலர்கள்வாய்வசையினாலழிந்து
மேதினியிற்கெட்டார்மிகவுண்டே யேதேனும். (௬௧௯)

தாவென்றுகெஞ்சவந்தச்சண்டாளனீயவ
ளோவென்றுகூவியுறத்தெழும்பி மாவலன்போல். (௬௨௦)

நீதமினிப்பேசவந்தாய்நீயுமோராண்பிள்ளையோ
கூதறையேயுன்னைக்கொடுப்பேனே சூதகமே. (௬௨௧)

வாகுகெட்டசோதாயென்வாயில்நல்லாய்வந்துவிட்டுப்
போகுதெதிர்நில்லாய்புறத்தொதுங்கு மூளைகெயாப்ப. (௬௨௨)

நீட்டமுடக்கறியாய்நீகெட்டகேட்டுக்குப்
பாட்டொன்றோவென்னபகுமானம் வீட்டு. (௬௨௩)

வருத்தமறியாதநெடுமாடேயுனக்குக்
கருத்திலனுவுண்டோகவலை பருத்ததன்றிப். (௬௨௪)

புத்தியில்லாநீவெளியேபோபோவெனவிளைந்தங்
கெத்தனையோபேசியெயிறதுக்கி நத்தியுன்பின். (௬௨௫)

போக்கற்றுவந்தபுலவனெங்கேயெங்கேயென்
றூக்ரமித்துப்பேசியதட்டினாள் தாக்கிப். (௬௨௬)

புலவனெங்கேயென்றுபுடைபுடைத்துச்சீறுங்
கலவரங்கேட்டுள்ளங்கலங்கி நிலைபெயர்ந்து. (௬௨௭)

சட்டிவருமுன்னேதலைசாய்க்கவேண்டுமென
வொட்டிமுன்னோர்சொன்னமொழியுண்மையே கிட்டியிங்கு. ()

வந்தாலும்வந்திடுவள்வந்திடிலோர்வேளைநம்மைத்
தந்தாபந்தீருமட்டுந்தாக்குவளென் றிந்தவிதழ். (௬௨௯)

சந்தேகமாய்ப்புலவர்தானோட்டங்கொள்வதற்கு
முந்தியுஜாராகமுழித்திருந்தார் தந்தலைவன். (௬௩௦)

பெண்ணேயென்றுசைப்பெருக்கேமருக்குலவுங்
கண்ணேயெனக்கிசைந்தகாதலியே பண்ணிவைத்த. (கூ௩க)

பாயாசம்போலுநல்லாய்ப்பாடினவர்க்கேதேனு
மீயாதிருந்தாலிளப்பமன்றே நீயே. (கூ௩உ)

யுணர்ந்திடுவாயென்றுபலவோதவிவன்சொற்
கிணங்கியுளஞ்சந்தோஷமாகிப் பிணங்குதலாய்ச். (கூ௩௩)

சாலநெடுநேரந்தனித்ததிவிசாரமுற்றுக்
காலணுவீந்தாள்கடுகடுப்பாய் ஏலுமிதை. (கூ௩ச)

நற்கொடையென்றேமதித்துநாவலன்பாலெய்திநல்ல
லக்கனம்வந்தீரெனவுநண்பாடி மெய்க்கவவன். (கூ௩ரு)

கைத்தலத்தைப்பற்றியுள்ளங்கையில்வைத்துத்தன்கையினாற்
பொத்தியினிதாகப்புகலுவான் நத்தித். (கூ௩சு)

திணைத்துணைநன்றிசெயினும்பனைத்துணையாய்க்
கொள்வர்பயன்தெரிவராமென் றினிதுரைத்து. (கூ௩எ)

மெல்லவிவன்கையெடுக்கமெய்க்கொடைகண்டேட்கியிவ
னுல்லங்கனமாயுரைபகர்வான் நல்லவன்போ. (கூ௩அ)

லேன்காணுநீர்தானிருந்திருந்துமிக்கொடையைத்
தாங்காதளிக்கத்தலைப்பட்டீர் போங்காணும். (கூ௩கூ)

திட்டிபடப்போகுதுகாண்சேலையினால்மூடியதைத்
திட்டிசுற்றியாங்கேசெலுத்திவிடுங் கட்டியெம்மூர். (கூச0)

செல்லும்வழிமார்க்கத்திருடர்பயமுண்டுகண்டீர்
நல்லதுணைக்கூட்டிநமையனுப்பும் வெல்லமன்ன. (கூசக)

பேச்சைநம்பிநாமும்வெகுபேராசைகொண்டதெல்லா
மாச்சரியச்சொப்பனம்போலானதுகாண் ராச்சியத்தில். (கூசஉ)

லும்மைப்போலும்பிரபுக்களுண்டோமூவேழுவள்ளல்
தம்மைத்தான்சொல்லத்தரமன்றே அம்மம்மா. (கூச௩)

நேர்த்திவெகுநேர்த்தியென்றுநிஷ்டூரமானசில
வார்த்தைபலபேசிமடமடத்தே யீர்த்து. (கூசச)

வசைபாடுவோம்பயலேவாடாகொண்டாடா
யிசையுமெழுத்தாணியெடடா பசையற்ற. (கூசரு)

மூடனுடனேபோமுதலெழுதடாமுதலிற்
கேடென்றெழுத்தைக்கிறுக்கடா மாடேயுன். (௬௪௬)

கைவிரசுவேண்டாமாகற்றவர்க்கீயாதவிவன்
ஐசுவர்யமெல்லாமறிகிறேன் பொய்யோடா. (௬௪௭)

யீரொட்டுநாளையிற்பாரென்றுகடைவாய்நுரைக்கப்
பேரிட்டுக்கத்தும்பொழுதிலவன் நேரிட்டே. (௬௪௮)

யென்னகடிநாய்ப்புலவீரோதுபரிகாசமுடன்
சின்னமொழியாலிகழ்ச்சிசெய்திட்டா யுன்னைத். (௬௪௯)

தலைமழுக்கம்பண்ணித்தகுந்தசிட்சைசெய்வேன்
புலவனென்றதாலேபொறுத்தேன் பலநூல்கள். (௬௫0)

முற்றுணர்ந்தேமென்னமொழிந்தாய்சபாசுனது
கற்றறிமோழைத்தனத்தைக்காட்டினாய் மற்றும்வசை (௬௫௧)

பாடுவோமென்னப்பயமுறுத்தினையதுதான்
றேடியெனைவந்தென்னசெய்துவிடும போடாபோ (௬௫௨)

சாவத்துணிந்தாற்சமுத்ரமுளங்காலாமுன்
பாவுக்குச்சற்றும்பயந்திடேன் நீவலியட். (௬௫௩)

பல்லைப்பிளந்துகவிபாடியிசைத்தாலுமினிச்
சல்லிக்காசொன்றுதரமாட்டேன் நில்லாதே. (௬௫௪)

யூராருடைமைகளையூசாடிச்சுற்றுதற்குப்
பேராசைகொண்டபெரும்பதரே யாரானை. (௬௫௫)

யேமாத்திவந்தாயெவர்பொருளைக்கொள்ளையிட்டாய்
காமாட்டியுந்தன்கருத்தறிந்தே னுமாநீ. (௬௫௬)

கொண்டிடுமெவாவடங்கக்கோத்தடிக்கம்புர
சண்டுசெய்வேன்செய்வேன்றடையில்லைக் கண்டாயித். (௬௫௭)

தக்கமரியாதையுடன்றப்புவதேமெத்தநலங்
கெக்கலித்துநின்றூற்கெடுதிவரும் மிக்கணமே. (௬௫௮)

செல்வாய்செல்வாயெனவேசெப்பவிந்தபொய்ப்புலவ
னொல்காமற்பின்னுமுளறிநிற்கப் புல்வாயை. (௬௫௯)

மோதுபுலிபோற்சினந்துமுன்னேநெருங்கிவரப்
பீதியுடனேபுல்வர்பின்வாங்க வாதோடவன். (௬௬0)

தாவிட்பிடிக்கவின்றப்பித்துலாகுகொண்டு
கூவியிருகாற்கதியைக்கூடினனே காவுரவு. (சுசுக)

மானேட்டமெத்தவலியில்லேவந்தகல்வி
மானேட்டமெத்தவலியுாதே தானே. (சுசுஉ)

யெசமானுய்வந்தவர்பாடிவ்விதமானுலோ
சிசுவெனுங்கற்றுச்சொலியென்செய்வான் விஜையன்விடு. (சுசுா)

மஸ்திரமும்பின்னிட்டடங்கவவன்காற்கதியைய
விஸ்தரித்துச்சொல்லவுந்தான்வேண்டுமோ டஸ்தளிகால். (சுசுச)

செய்யமலர்விட்டுத்திரளாரளியினங்கள்
கைதைமலருற்றுக்கவலுதல்போல் வையகத்தில். (சுசுரு)

நல்லோர்பலரிருக்கநாடாதுலுத்தரெனும்
புல்லோரைச்சென்றுபுகழ்ந்துகவி சொல்லியுமோர். (சுசுசு)

நன்றியறியாதவராய்நானும்புலவனென்றே
கன்றியுழன்றோர்கனபோர்கள் தொன்றுதொட்டுச். (சுசுஎ)

## சோதிடன் சரித்திரம்.

சோதிடத்திலார்க்குந்துணிந்தமனப்பற்றுதலுண்
டாதலினுமுமதைப்பகர்ந்து நீதனைய. (சுசுஅ)

காலத்தைத்தன்னுவதேகாரியமென்றெண்ணிமிக
மேலத்தாய்ப்பேசிவெளிப்பகட்டாய் நால்முறையிற். (சுசுகூ)

சார்ந்தபலகணிதசாஸ்திரமதிலொன்றேனு
மோர்ந்தறியாமெல்லாமுணர்ந்தவன்போ லார்ந்தசெல்வர். (சுஎ0)

தன்சாதகமுந்தரித்ரகதியுற்றவர்க
ளின்சாதகமுமியல்பறிந்து முன்சார்ந்த. (சுஎக)

சாதகத்தைப்பார்த்துதகுந்தமகாயோகமுள்ள
சாதகமீதென்னத்தலையாட்டி யோதுபலன். (சுஎஉ)

றுணறியானவ்வவர்கள்தன்னில்மகிழ்வோங்கவதின்
பான்மையின்றிசேர்ந்தபடியுரைப்பான் ஆனஜன்மம். (சுஎா)

| | | | |
|---|---|---|---|
| ராகு | | செ | |
| | | | வி |
| | இராசிச்சக்கரம் | | |
| சந் | | | |
| கு | | ல·சு. சனி. | கே |

நாக்கானலக்கினத்திற்சுங்கனுறச்சந்திரனு
மீக்கூர்நாலாமிடத்தில்மேவிநிற்கக் கோக்கிரக. (௬௭௪)

முச்சனிலைபெற்றமன்குலாமதியைப்பார்த்திடலா
லுச்சிதராஜாங்கசுபயோகமிதே யிச்சைதரும். (௬௭௫)

வாக்குத்தானத்தில்வளர்வித்யாகாரகனை
யூக்கமுற்றிரண்டுக்குடையவனை நோக்குதலு. (௬௭௬)

நன்குறுபாக்யாதிபனுமற்றனபாவத்திலுறப்
பொன்கனிந்துபார்க்கும்பொருத்தமதால் மன்புகழும். (௬௭௭)

வித்தைப்ரசங்கவிதரணநற்கேள்விநவ
ரத்தினம்பொன்னேத்ரநலமுமுண்டாஞ் சுத்தமுள்ள. (௬௭௮)

மூன்றுமிடத்திற்முளரிப்பதிமருவ
வூன்றுமயதற்குடையோனுச்சமுற்றும் வென்றிநிலா. (௬௭௯)

பற்குரியநட்புறலாற்பண்புறுசகோதரர்பூண்
பொற்கலமும்சாகம்பொருந்துமே யிற்குரிய. (௬௮௦)

வாகனத்தானத்திலமதிக்கந்தரகவது
யோகனத்தானத்தனுச்சம்பெறலா லாகுநற்றேர். (௬௮௧)

வாம்பரிகற்கட்டுமனைபூமிபாற்பசுக்கள்
மேம்படுமிட்சேடமிகப்பெருகு மோம்புமகத். (௬௮௨)

தானபதிகேந்த்ரமுற்றுச்சார்புறுசென்மாதிபனை
டானுறவுகொண்டுமரசனையே மேவிவந்து. (௬௮௩)

பார்த்திடுதலாலும்பலன்றருபாக்யாதிபதி
சீர்த்திகழ்நற்றும்பஞ்சேர்தலா லார்த்தபுகழ். (௬௮௪)

மாதுலன்ப்ரபந்தகவிமந்திரங்குமாரர்களூழ.
தாதையர்செய்புண்ணியமுஞ்சார்ந்திடுமால் மோதலுறு. (௯௮௫)

சத்துருத்தானந்திற்றனித்தகருங்கோளூறலாம்
சத்துவமாலூர்திகண்டசர்ப்பம்போம் சத்துருக்க. (௯௮௬)

ஏஞ்சிப்பணியவிடமார்பணிதொடாமலுநோய்ச்
சஞ்சிதமுறுதுசுகந்தான்பெருகும் விஞ்சுபுகழ். (௯௮௭)

நீடுகளத்ராதிபதிநேயவிடைமேலேறந்
தேடுபுகர்சொட்சேத்திரமுள்ளுய் நேடிவே. (௯௮௮)

றாமிடத்தைப்பார்ப்பதிஞலாயிறையுமாயிறையாய்
மாமருவுஞ்செல்விமனேவாய்ப்பதன்றிக் காமியசம். (௯௮௯)

போகமுயர்பாக்கியமும்பூபாலர்தந்தயவு
மாகனசற்கீர்த்திவளமருவும் வாகனட்ட. (௯௯0)

மாதிபதியாமலைறக்கோளாட்சிமனேமேவமறை
யோதுகுருகர்க்கடகத்துச்சமுறச் சீதமதி. (௯௯௧)

மாளுணகேந்திரத்தின்மன்னிநிற்றலால்வயது
தானூறெனவுமெல்லச்சாற்றலா மாளுலுஞ். (௯௯௨)

சன்மத்திலேசனியுஞ்சட்டாட்டமவியத்திற்
றின்மைதருபாம்புகளுஞ்சேயுறலாற் பின்மருவ. (௯௯௩)

லாகுமிவர்தன்றிசையிலவ்வவர்கள்புத்தியிலு
ரோகமுறுங்கண்டமுயிர்க்குவரு மானையிளுற். (௯௯௪)

சார்ந்தநவக்கிரகசாந்தியொடுமந்த்ரவுருத்
தேர்ந்தரக்ஷாபந்தனமுஞ்செய்வித்தே நேர்ந்தாயு. (௯௯௫)

ளோமம்புரிந்தாலுடனேவினேவிலகி
நேமியிற்றீர்க்காயுள்நிலவரமே பூமலியொன். (௯௯௬)

பான்பிதிர்த்தானதிபரவுதன்மீதிருக்க
வாணிரவிநின்றமனேக்கதிபன் மேன்மையுடன். (௯௯௭)

தானுச்சம்பெற்றிடலாற்றந்தைநெடுங்காலமிரும்
தேநிஷ்டைகூடிச்சிவமடைவான் மேன்மக்க. (௯௯௮)

ளோன்பதொன்றுநாலுடையோரோக்குதம்மில்மித்திரா
யன்புருவவேந்தனுச்சயானதிறல் நன்குலவு. (கூகூகூ)

திக்கையுபதேசஞ்சிவபூசனைகுளமுண்
டாக்கல்மடங்கட்டுதலநேகமா மூக்கமிகும் (க000)

பத்தெனுங்கர்மாதி. திநான்கிலேபலமா
யொத்திருந்து...ன்மனைநோக்குற்றதினு மத்தலையிற். ச00க)

றங்கியதாராபத்...தாரா...திய பம்புதனைச்
செங்கணுறலாலுமுயர்செய்தொழிலில் சங்க்ரகத்தில். (க00உ)

சற்கருமகாரியத்திற்சார்ந்திமோலோசனையிற்
சொற்கணிதசாஸ்திரத்திற்றூயவனுய் மிக்கபுவி. (க00௩)

ராசர்கட்குமந்திரியாய்ராசரபிமானனுமாய்க்
காசினியில்நாளுங்களித்திருப்பான் வீசுபுகழ். (க00ச)

மெச்சியலாபாதிபதிமேவுமனைக்காதிபனல்
லுச்சமொடுகேந்திரத்திலொன்றுதலா லச்சமிலை. (க00ரு)

யண்டர்குருநோக்குதலாலன்டையலாஞ்சுற்றுவன்கோ
தண்டயனையேந்திந்தழுவுதலால் மண்டுகுலாக். (க00சா)

குத்திசையின்மீதிருந்துகோடிபசும்பொன்திரண்டு
மெத்தமெத்தலாபமிகும்துவரு முத்தமனே. (க00எ)

புத்தமுதமன்னபுதன்றிசைபோயிப்பொழுதி
லத்தறுகட்கேதுதிசையாரம்ப மித்திசையிற். (க00அ

றக்கசயபுத்திசமபலனுந்தைமுதலிற்
சுக்ரபுத்தியாதிசுகபோக மொக்குமிந்தக். (க00௯)

கேதுதிசைநீங்கினமேற்கீர்த்திப்ரதாபசுக்ர
மாதிசையுற்றுலோமளமளப்பாங் தீதில்வியந். (க0க0)

தானத்திற்கேதுறலாற்சார்ந்ததமனோக்குறவலால்
மேன்மெத்தைமேன்மெத்தைமீந்திடினுங் தானத்தைத். (க0கக)

தூக்கிச்சுருட்டியக்கேதூங்குமிவன்றூங்குவதும்
வீக்கியபுற்பாயலதுவேறிலையே போக்குவிபத். (க0கஉ)

தோன்தனத்திலேமருவச்சோமனைமன்பார்த்திடச்சுன்
னோன்மிலசனின்றூற்றுங்குறிப்பினால் மாநிதிகள். (க0க௩)

வீணருக்குங்கள்வருக்கும்வேசையர்க்குமன்றியியல்
வாணருக்கொனறியமனம்வாராதே நீணிலத்துக். (௧௦௧௪)

காகரமுற்றோங்கியமேலான்றோர்கள்சொற்கணித
சாகரத்தைநீந்துஞ்சமர்த்தனென்றே மாகவடன். (௧௦௧௫)

பேசவுயிர்க்கண்டமென்றபீதியினாற்சாதகனு
மேசறுநற்சாந்தியியற்றுமென வீசுநிதி. (௧௦௧௬)

தானியப்பெற்றுச்சமர்ப்பித்தோர்த்தீர்க்கமுற
லானீரனுக்ரகமுண்டாயினவென் றேங்கிகழ்த்திப். (௧௦௧௭

பின்னருறுசாதகத்தின்பெற்றியுரைப்பாமெனவுந்
தன்னருளில்லாதவர்க்குச்சாற்றுவான் மன்னுலசன்ம. (௧௦௧௮

லக்கினமேகாரிமனோடியதிற்சோமனுற
மிக்கவர்க்குப்பன்னென்றில்வேந்தனிற்கச் சிக்குறவே (௧௦௧௯

தேய்குஜன்மகேந்த்ரத்திரிகோணந்தானமதி
னீங்கரியபாவர்நிகழ்ந்துறலா லாங்கதுவே. (௧௦௨௦

கேமுத்ரயோகங்களொக்கதரித்திரமுண்
டாமித்தையன்றியுமோராணியுறும் தீமைம. (௧௦௨

தருங்குளிகனுயுட்டாணந்தனைப்பார்க்கின்றான்
கருங்கோளுங்கூடக்கலந்தான் வருங்கவற்சி. (௧௦௨௨

யானைகயினுலின்றேயதற்கடுத்தசாந்தியொன்று
வேகமுடன்செய்வீரெனமிரட்டி. யோகையொடு. (௧௦௨௩

கைப்பொருடந்தார்க்குக்கனராஜயோகமென்று
மப்பொருடாரார்க்கீதடபலமென்றும் பொய்ப்பறையா. (௧௦௨

யாமென்றுசொன்னதுவுமாகாதாயாகாதே
போமென்றுசொன்னதுவும்போகாதாய்ப் பூமியெங்குஞ். (௧௦௨

சுற்றித்திரிந்துநல்லஜோசியர்நாமென்றுபொருள்
பற்றியலைந்தார்பலபேர்கள் மற்றுமந்த. (௧௦௨

## வேசையரியல்பு.

வெய்யபவமேயுருவாய்மேதினியில்வந்துதித்து
சையமுலைவேசையர்கள்தந்திரத்தை செய்யதமிழ்ச். (௧௦௨

சுப்ரதீபன்முகவைத்தொல்சரவணப்பெருமா
னிப்புலவர்சொல்விட்டாரென்செய்வேன் நப்பி. (௧௦௨௮)

துழைதற்கிடமிலையேயாயினும்நூல்கல்லா
மழலையேன்யானறிந்தமட்டிற் பழிமடவார். (௧௦௨௯)

மைப்பகட்டுக்கண்ணால்மயக்கிப்பொருள்பறிக்கும்
பொய்ப்பகட்டிற்கொஞ்சம்புகலுவே னப்பரத்தை. (௧௦௩௦)

யார்கள்பணிபூண்டணிமுலையைக்காட்டியுடை
சோர்வுறயாழ்மீட்டிச்சுருட்டிவிழிப் பார்வையினு. (௧௦௩௧)

லாடல்தருங்கையாலபிநயஞ்செய்வார்போலோ
ராடவனையேய்த்தங்கருகிருத்தித் தேடுமவன். (௧௦௩௨)

கையிருப்பையோர்ந்துகவர்ந்துவிடலாமெனவும்
மெய்யுருக்கங்கொண்டுமெலிந்தவன்போ லய்யாவும். (௧௦௩௩)

மூரேதுபேரேதுரையீரென்சாமிமத
னூரேயென்கண்ணேயயிர்தமே நீர்முந்தா. (௧௦௩௪)

[illegible]த்திவ்வீதிவந்தீர்நான்கண்டேனக்கணமென்
தோள்கனத்துவிம்மித்துவளநனங்கள் வாளிணைத்த. (௧௦௩௫)

[illegible]னுட்டாதிரிரவுங்காமசரத்தாலுடலம்
புண்பட்டேன்துன்பம்பொறுக்கிலேன் நண்புற்று. (௧௦௩௬)

வந்தீரென்றெய்வவலதால்நான்கண்டகனு
வுந்தீர்க்கமாகிலமுற்றதே யுந்தமைநான். (௧௦௩௭)

விட்டிப்பிரியேனும்மேலாணைநீருமெனைக்
கட்டித்தழுவிக்கலந்திடுவீர் கிட்டி. (௧௦௩௮)

யுமைப்பார்த்தகண்ணாலொருவர்முகம்பாரே
னிமைப்போதுநீங்கேனெனவும் கமுக்கமொடு. (௧௦௩௯)

சாலமிட்டுப்பேசுந்தருணத்தில்வேறொருவன்
கோலமிட்டவாயிற்குறுகுதலும் ஆலமொத்த. (௧௦௪௦)

தாய்க்கிழவியுள்ளிலவன்சாராவிதமிருத்தல்
நோக்கியவன்யார்நீறுவலென்னப் போக்கற்ற. (௧௦௪௧)

மட்டிப்பயலோன்மதிகெட்டகாய்ப்பயல்வீண்
சட்டித்தலையன்தடிக்கழுதை லொட்டியயின். (௧௦௪௨)

கள்ளருந்திநாளுங்கடைதோறுழல்மடையன்
விள்ளருந்தீயன்னவெறியினான் உள்ளிவந்த. (௧௦௪௩)

தெற்றேனாவினவுகின்றேனிவ்வறைக்குணீர்பதுங்கிச்
சற்றிருமென்றன்னவனைச்சந்தித்தே யுற்றிருகை. (௧௦௪௪)

கூப்பியடியாள்மீதுகோபமாசண்டாளப்
பாப்பியவள்சொன்னபடிப்பினையா வேப்பிலைபோ. (௧௦௪௫)

லானேனோசாமியருமைத்துரையேயெய்
கோனேயெனக்கேற்றகுஞ்சரமே யானுமுளம். (௧௦௪௬)

நாணாதுடல்மெலிந்துநாலைந்துநாளுமுமைக்
காணாதுகண்ணுறுமொருகண்ணுமோ வூணுறக்க. (௧௦௪௭)

மற்றேனையத்தானென்னாசைக்களஞ்சியமே
நற்றேனைமற்றவனைநத்தேனே சற்றே. (௧௦௪௮)

நழுவணையிற்சாய்ந்துமதுதம்பலத்தையென்வாய்
மழுமழுப்புத்தீரவழங்கீர் கிழவிசெய்த. (௧௦௪௯)

ஆக்ரமத்தைக்கேட்டிராயாரோவொருவனிடங்
கைக்கடனாய்ப்பாத்ரக்கட்டுகுந்து தக்கவொரு. (௧௦௫௦)

கொப்பரையைவாங்கிவந்தாள்கூடாதெடுத்தெறியென்
றெப்படியோசொன்னேனிணங்காமல் முப்பகலாய். (௧௦௫௧)

மாச்சரியமெத்தவளர்ந்திங்கவட்கெனக்கும்
பேச்சிலையென்சொல்வேன்பிரமாதம் ஆச்சுதந்தப். (௧௦௫௨)

பாத்திரக்காரப்படுவாணடிக்கடிவந்
தாத்திரமாய்ப்பேசியலையிறான் பார்த்திருக்கக். (௧௦௫௩)

கூடலையயத்தைக்கொடுத்துத்தொலைத்துவிடுங்
கூடலையென்றெண்ணிமனங்கோணாதீர் நீடியுமை.(௧௦௫௪)

யன்றிப்புகலெனக்கிங்கார்சொல்வீரய்யாநீ
ரன்றிரவிற்கன்னியழித்தமுதற் றான்றுமிநி. (௧௦௫௫)

தன்னைமதித்தேனுன்தாய்வார்த்தைகேட்டேனா
பின்னொருவராசைபிடித்தேனா மன்னவரே. (௧௦௫௬)

நீரேகெதியெனவுநேசித்தேனென்பதிங்க
ஊரறியுந்தெய்வவுளமறியும் நீரறிவீ. [illegible]

ரென்றுபலவாறுயியம்பித்தழுவுவள்போ
லன்றவன்கௌபீனத்தடக்கிவைத்த பொன்றுகையைக். (க0ருஅ)

கைப்பற்றிக்கொண்டுகனிந்தபொழுதாங்கவளை
வைப்புற்றோன்மெல்லவரவவனை யிப்பதிதன். (க0ருகூ)

யாரென்றான்கேளீரயலானெளியபிச்சைக்
காரனிலுமெத்தக்கடைகெட்டான் சேரழிந்து (க0சு0)

சூதாடிக்கள்வனிலன்சுத்தவிருசாப்பயற்கிங்
கேதேனுஞ்சோலியொன்றுமில்லைக்காண் காதலரே.(க0சுக)

மின்றிகழுமேனிவெயர்த்துப்பயிர்ப்படைந்தே
னின்றிரவுமாலையெழுமணிக்கு ளொன்றியா (க0சுஉ)

யீங்குறுவீரென்றவனையெழுதிவெளியேற்றுவிடுத்
தாங்கவன்பாலெய்தியனம்போலும் பாங்குடையீர். (க0சுங)

நேற்றிராவோர்மணியும்நீர்வருவீரென்றுதனி
வீற்றுநெடுநேரம்விழித்திருந்தேன் காற்றிலலை. (க0சுச)

பட்டகலம்போற்பழிகாரமன்மதனார்
தொட்டசரமெண்ணத்தொலையுமா லொட்டிமிக. (க0சுரு)

வாடுமெளியாள்மனைதயறிந்துமென்பீறு
டேல்புரிதலுமக்கழகா [illegible]. (க0சுசு)

யன்றிமற்றோர்க்காசைப்படுவேனுமெய்யாயுமி
கன்றிடினும்புல்லைக்கறிக்குமா வென்றுபுனைக். (க0சுஎ)

கைவிட்டனென்றெனக்குக்கட்டுறுதிசொன்னதெல்லாம்
பொய்வசனந்தானோபுலையாட்டே வையகத்தி. (க0சுஅ)
லென்சேர்ட்டுப்பெண்டுகளோவெவ்வளவோகோடிபசும்
பொன்தேட்டிக்கொண்டுபுகழ்படைத்தார் அன்பொடுமை. (க0சுகூ)

கம்பியிருந்தேனைகட்டாற்றில்விட்டீரே
வம்பியர்களேசவனையாச்சே கொம்பிறந்த. (க0எ0)
மந்திபோலகமறுகித்தவிக்கவுங்கள்
சிந்தையிரும்பாயிரன்சிலையா சுந்தரவில் (க0எக)

மன்றாவெனவிழிநீர்மார்பில்வழிந்தோடுதல்கண்
டன்றான்மெய்யென்னவவளையணைத் தன்னமே. (௧௱௭௨)

கோணிமனம்வாடிக்குலையாதேயென்தெய்வத்
தாணையுனைக்கைவிட்டகன்றிடேன் காணிகள்விற். ௧௱௭௩)

றுன்பாலளிப்பேனொருக்காலுஞ்சொற்றவறே
னென்பாற்கவடுறுமென்றெண்ணாதே நம்புவையென். (௧௱௭௪)

றேனவாய்ப்பேயனியம்புமொழிகேட்டுநகைத்
தானுறிஞ்சிமெல்லநயந்தோதுவாள் மானனையாள். (௧௱௭௫)

வன்னச்சரிகைப்பாவாடைத்துணிமணிகள்
என்னென்னமோகடன்கொண்டெய்தினு ரன்னகடைக். (௧௱௭௬)

காரனவன்றருந்தரவைக்கண்டுரைக்கப்போமோயெந்
நேரம்வருவானோவிலையறியேன் நீரதனைத். (௧௱௭௭)

தீர்த்துத்தொலைத்துவிடுஞ்செல்லத்துரையேயென்
றேய்த்தவன்கைப்பொன்னையினிதுபற்றி ராத்திரியி. ௧௱௭௮)

லெட்டுமணிநேரமெழுந்துவருவீரெனவச்
சொட்டனையுமெத்தித்துரத்திவிட்டு மூட்ட. (௧௱௭௯)

வயலைநக்குட்பட்டவவளையுஞ்சோதித்துக்
கயிலிருந்ததெல்லாங்கவர்ந்து தயவுசெய்திக் (௧௱௮௦)

கங்குலினீரொட்டுக்கடிகைதவறுமலுநீ
ரிங்குறுவீரென்னவுமேமாத்தியே சங்கையிலா (௧௱௮௧)

இப்படியேயொவ்வொருவர்க்கிங்கிதங்கள்பேசியவர்
கைப்பொருளைப்பற்றிலுந்தன்கைப்படுத்தி யப்படுவா. (௧௱௮௨)

ராங்குவருநேரமறிந்தாடைகளைந்தோர்துவாலையைப்
பாங்கறவேசுற்றிப்பயில்காட்டி யீங்கு. (௧௱௮௩)

விலக்கமுற்றேனென்னவிசனித்தாள்போலே
ருலக்கையைநேரேகிடத்தியோர்கா விலக்கமுறும். (௧௱௮௪)

றைந்துநாளாகவேயாங்குகருப்பன்குறையென்
றுந்தியகோடங்கிமுழக்கோசையிட்டுத் தந்திரங்கள். (௧௱௮௫)

காட்டிப்பொருள்பறித்துக்காரிருளிற்சென்றுதடு
காட்டிற்கழிப்புக்கழித்தானே மீட்டுமொரு. (௧௱௮௬)

மாந்திரிகனென்னைமோமாயவித்தைசெய்தவனோ
ரேந்திரத்தையென்கழுத்திலிட்டானே தேர்ந்தபரி. (௧௦௮௭)

காரியொருவன்சூதகத்திரட்சியாமெனவேவார்
சூரணத்தைநல்கவுநான்றுய்த்தேனே காரியமொன். (௧௦௮௮)

ருகலையேயென்கையருமைப்பொருள்துலைந்துந்
தேகசொஸ்தமில்லாமற்சீர்கெட்டேன் மோகமுற்று. (௧௦௮௯)

வந்தீரேயுங்கள்மனம்போனடப்பதற்குச்
சந்நியிலிப்பேஷ்டைதடையாச்சே யந்தோநா. (௧௦௯௦)

னிச்சைமிகக்கொண்டேனேயீரெண்டோருமதன்
சச்சரவிற்பட்டுத்தவிப்பேனே இச்சனியன். (௧௦௯௧)

நாளையுமப்பாகாதநாசமற்றுப்போகாதா
கோளுரையென்பாவத்தைக்கொட்டிற்றே வேளையிது. (௧௦௯௨)

போனாலுமென்னையொறுத்திருந்திங்கஞ்சாநாட்
டானேவருவீர்தடையிலையே கோனேயென். (௧௦௯௩)

றென்றொருவருக்குமிற்றேபோதியவர்போனபின்னர்
கையளமூர்றூங்குமருங்காளையைத் துய்வியனோர். (௧௦௯௪)

திவ்விதமாய்மாயமியற்றித்தனங்கவரும்
மைவிழியார்செய்கைவழுத்தரிதே யொவ்விவெதிர். (௧௦௯௫)

கண்டால்முகஸ்துதியுங்காணவிட்டத்திழிவும்
இண்டாடல்காட்டித்திரியுமிந்த லண்டியரை. (௧௦௯௬)

நோக்கிப்பொருளிழந்துநோய்கொண்டெளியவரா
யாக்கமற்றுக்கெட்டாரநேகரே நீக்கரிய. (௧௦௯௭)

தத்தமனையாளைத்தணிபிறத்திப்பற்பலர்போ
கத்தைநுகர்ந்தோவிக்கணிகையர்மேற் பதிவைத்த. (௧௦௯௮)

காரணமீதென்னேவக்கன்னியர்களல்குலிலே
வாரியமுதத்தையுள்ளில்வைத்தனவோ சாரமுள்ள. (௧௦௯௯)

தேனைப்புகுத்தினவோசினிப்பாகாலுமதைத்
தானமைத்ததோவலதுசர்க்கரையோ ஆனலவு. (௧௧௦௦)

கற்கண்டைமுக்கனியைக்காய்ச்சிச்செலுத்தினவோ
பெற்கொன்றுந்தோன்றூதெழுமரம்போல் நிற்கின்றேன். (௧௧௦௧)

அந்தோவென்சொல்வேனழிந்ததகையுடையார்க்
கெந்தவிதஞ்சொல்லினு * மன்னேருதே முந்துகன. (கக0உ)

தேட்டிற்பெருமைபெற்றுத்தேசார்ந்தவேசையரும்
நாட்டிலுற்றபஞ்சகலியினாற் றேட்டிழந்து. (கக0ரு.)

மேனிமினுக்கொழித்துமேவிற்றசைவறந்து
கூனல்மந்திபோலுமெழில்குன்றினரே யினமுமறந் (கக0ச)

தொற்றுவிபசாரத்தொழில்புரியுமாதர்களைப்
பற்றியிதில்முன்னும்பகர்ந்தனனல் சுற்றுஞ். (கக0ரு)

## சவுளிக்கடைக்காரர்சரித்திரம்.

சவுளிக்கடையுடையார்தன்செயலுஞ்சற்றே
விவரித்துச்சொல்வேன்மெலுக்காய் எவருக்கு. (கக0சு)

மானங்காப்பார்களென்றவாய்மையேயன்றியபி
மானங்காவாதவளமுடையார் தானம். (கக0எ)

குடல்குழையநெய்தோருடைகளைக்கொண்டன்ன
கடைகாரர்பாலதனைக்காட்ட வுடைமீதி. (கக0அ)

விட்டசாமான்களையுமேழெட்டுநாளுமவர்
பட்டபிரையாசமொன்றும்பாரமா விட்டமுடன். (கக0கூ)

பாதிவிலைகேட்கப்பகிமொன்றெழுந்தந்த
வீதியெலாஞ்சுற்றிமிகவலைந்தும் மாதியினிற். (ககக0)

கேட்டவற்குக்கம்மிவிலைகேட்கமறுபோக்கிலராய்
மீட்டுமுனஞ்சென்றகடைமேவியே நாட்டொடங்கி. (கககக)

யற்றைப்பிழைப்புடையாராகையாலன்றவர்கள்
சொற்றவிலைபெற்றுமனஞ்சோர்ந்தகலத் துற்றுஞ் (ககக௨)

சவுளிகளைச்சேர்த்தடுக்கிச்சார்ந்தவிலைதன்னை
யுவகையுறவொட்டித்துயர்த்திப் பவமுறுகைச். (கககரு)

சாத்தெழுதியுள்ளோர்ச்சரக்குகளுக்கோரணாக்கா
லேத்துதுலைச்சரக்குக்கீரணாக்கால் வாய்த்திதுவே. (கககச)

லாபமென் றுமேதிலர்காண்கேலாவிலாசமொன்று
தீபகம்போலெவ்வொன் றிற்றீட்டுவார் சோபிதமாய். (ககக௫)

வந்தோர்க்கெழுந்துவணங்கியுபசரிப்பார்
முந்தவுந்தாம்பூலத்தைமுன்வைப்பார் அந்தோநீர். (கககசு)

மின்மருவுமேனிவெயர்த்திரொனமெழுந்து
மென்விசிறிகொண்டுமெல்லவீசுவா ரன்னியர்வந். (ககக௭)

தின்னார்கடையாங்கனமெனவுங்கேட்பவருக்
கன்னுளென்றேயவம்புகல்வார் பன்னுளும். (ககக௮)

வீசுகடைவாயினின் றுவேறுகடைக்கேகுவனை
யாசைமிகவூட்டியனைத்திடுவார் பேசுகிறக். (ககக௯)

கோல்கொண்டளந்துகுறிக்கும்பொழுதழுக்கை
யேல்லையுறவைப்பாரிரணடிடத்தில் சேலைவிலை. (ககஉ0

தன்னிலொருரூபாய்ச்சரக்கையனையாய்க்கொடுத்துப்
பின்னிரட்டிப்பாகப்பெறிதுகொள்வார் மன்னுகலைக். (ககஉக

காங்குவருவார்கடம்மிலான்னோக்கம்பார்த்துமகிழ்ந்
தீங்குவருவீரொன்றினைமறஞ்சியே தாங்களிங்கு. (ககஉஉ

வந்ததுவுமென்றவமேவார்த்தகசம்பாதனையிற்
சிந்தைவைத்தேனென்று * தெவிட்டாதீர் சந்ததமும். (ககஉ௩

தூக்கமதில்மூழ்கிச்சுமூலாமலேபொழுது
போக்குதற்காய்வைத்ததிந்தப்போட்டியே யாக்கமுற்று (ககஉ

* மோதமுறவுள்ளோன்முதற்குமூதற்கிடைத்தாம்
போதுமென்பதுள்ளப்பொருத்தமே யீதிற். (ககஉ(

கடைவைத்தநாள்முதலாய்க்காசினியோர்மற்றைக்
கடைகளோநாடாமற்கசந்தா ரிடையிற். (ககஉ

கடைகாரர்கூடிவழிகட்டிமறித்தாலுந்
தடைமீறியென்கடையேசார்வார் கடைகாரர். (ககஉ

தன்முகமேதாமரையாயென்முகமோர்சந்திரனுய்ப்
புன்மையமுக்காறடைந்தார்புந்தியிலார் தன்மனிவன். (ககஉ

* தெவிட்டல்-நினைத்தல்,
* மோதம் சந்தோஷம்.

ஞமென்றென் பால்மருவுமன்னவனை வேறுகடை
போமென்றுநான்சொல்லப்போகுமா ஓமென்ற. (கக௨கூ)

சத்தியமேவெல்லுந்தலைகாக்குந்தர்மமென
வத்தனுனைநீதியறியீரா யெத்தனைதான். (கக௩0)

மேவுகினுங்கொண்டவிரதந்தனைமறந்து
பாவமழல்மூழ்கப்படலாமா தேவனடி. (கக௩க)

யுள்ளியமெய்யன்பருகவாதருவருத்துத்
தள்ளியவீண்செல்வச்சவமன்றோ வெள்ளமெனப். (கக௩௨)

பொய்குற்றவர்தனமும்பூபாலர்வாழ்க்கைகளும்
எங்குற்றதன்றோவியம்புவீர் சங்கற்ப. (கக௩௩)

முன்னியநற்செல்வமுந்தாழ்வூர்ந்தசரித்திரமுந்
தன்னியற்பேரேயதற்குச்சான்றாகும் துன்னுமனப். (கக௩௪)

பற்றிற்படட்டினைத்தார்பாவபுண்யமேயிரண்டும்
பற்றித்தொடருமென்றும்பாடினார் துற்றியெழு. (கக௩௫)

புற்புதமேயாகுமிந்தப்பொய்யாமுலகவியல்
சொற்பனமென்றுள்ளத்துணிபன்றோ வற்பநிதிக். (கக௩௬)

காசைகொண்டுவீணையலைந்துதிரிந்தோமினிநா
மீசனடிக்காளாவதெக்காலம் பாசவினை. (கக௩௭)

வீட்டுபெரியோரருளால்வேதாந்தசாஸ்திரத்தில்
நாட்டமன்றிவேறொன்னைநாடிலேன் யீட்டுமுங்கள். (கக௩௮)

சொந்தக்கடையிதன்றோசூதாகவேம்றுமைகள்
புந்தியிற்சற்றேனும்பொருந்தாதீர் கந்தாநீ. (கக௩௯)

மேனடுத்தாவாரமதில்மேவும்புடவைகளைத்
தானெடுத்திங்கோடிவாசல்தியினில் கானடுக்க. (கக௪0)

முற்றனையோபோடாவுதவாக்கழிகுறடே
சற்றுமறிவில்லாத்தடிப்பயலே மற்றுநல்ல. (கக௪க)

சாமான்பலவிருக்கத்தாழ்ந்ததைநீகொண்டுவர
லாமாயிவனையறியாயா சீமான்க. (கக௪௨)

ளானபெரியோரெனவுமற்பமனுஷாளெனவுந்
தானறிந்துகொள்ளத்தரமிலையே மானரெனக். (கக௪௩)

இன்புள்ளநேசரிவர்க்கிப்புடவைகளை
யன்பிலர்போலீதலழகலவே பின்பிலைகள். (௧௧௪௪)

தானழுத்தமில்லைத்தனியோரிழைச்சரக்கு
மாகிறத்தசாயமிதுமங்கிவிடும் ஆனதினு. (௧௧௪௫)

விச்சவுளியெல்லாமெடுத்தவிடத்தடுக்கி
மச்சுவாசற்குவடபுறத்தில் வைச்ச. (௧௧௪௬)

புடவைகளிற்றாணிறுகற்பூவிறுகற்காயோ
டமெறுதற்காய்ப்பூவரும்பு படுமுடங்கற். (௧௧௪௭)

பிஞ்சுமலர்தற்பழம்பூப்பின்குவிதற்காயரும்பு
எஞ்சும்விரிதற்காயெழுதற்பூ மிஞ்சிணங்க. (௧௧௪௮)

விந்தவிலாசம்போட்டிலங்கும்புடவைகளை
மந்தமிலாநீண்டெடுத்துவாவென்ன அந்தமுழுப். (௧௧௪௯)

பட்டிமகனுங்குற்றபாவனைபோற்றுமதித்தங்
கெட்டியதையேகொடுவென்றெய்தலுமே இஷ்டமுள்ள. (௧௧௫௦)

தாட்டிகரோநல்லதரமதிகநேத்திரிது
சேஷ்டராபிசுச்சிரஸ்ததார் வீட்டுக்குச். (௧௧௫௧)

சொல்லிவரவழைத்ததூயகலைவர்க்கமன்றோ
கல்வியீர்முற்றுமிதைக்கண்பாரும் பல்குமிது. (௧௧௫௨)

இன்னதிருசின்னவிலையீழத்துப்பட்டுடைகள்
சென்னையிற்பேர்பெற்றதிருசிதுகாண் சொர்ண. (௧௧௫௩)

நிதிக்குத்தகுந்தகிறைசரிகைபூட்டி
புதிப்புற்றுயர்ந்தவுருமால் சதுர்க்கிசைந்த. (௧௧௫௪)

சாதராவிதுகல்லசால்வைபீதாம்பரம்பொய்ச்
சூதிராக்கண்டையிட்டதுப்பட்டா வீதுசெழும். (௧௧௫௫)

பட்டுக்கரைச்சோமன்பார்வைக்கெப்போதுநிறம்
விட்டுக்காட்டாதுமிகவழுத்தம் நெட்டையிது. (௧௧௫௬)

காஞ்சிபுரச்சோமனிதுகன்னடதேசத்துமடி
நாஞ்சிலகோட்டிலுளநல்லுடைகள் தீஞ்சொல்மட. (௧௧௫௭)

மாதிர்க்கிணங்குமணிவண்ணப்புடவைகளி
லோதற்கெளியனவோவொவ்வொன்றும் சோதிநிகழ். (௧௧௫௮)

முத்துவர்ணம்சித்ரவர்ணம்மோகவர்ணம்மேகவர்ணம்
நித்திலத்தார்பூண்டவெளிவர்ணம் மெய்த்தரவி. (ககருக)

காந்தம்நிலவார்ந்தசந்த்ரகாந்தமுயர்மாமதன
காந்தமெழில்மேவுமிந்த்ரகாந்தமிசை வாய்ந்திலகு. (ககசு0)

தீம்பட்டகஸ்தூரிசேலைகுறநாட்டுமெணிப்
பூம்பட்டுநேர்கடலைப்புட்டாணி யாம்பற்போ. (ககசுக)

தன்னபந்தர்ச்சேலையருகுமணிச்சேலையிது
வன்னமயிற்கண்சேலைவாணுந்தார் பின்னுமிது (ககசுஉ)

கஞ்சத்துச்சல்லாகமழ்சந்த்ரகாவியிது
பஞ்சவர்ணப்பூவிழைத்தபாவாடை மஞ்சுறுத்தும் (ககசுங)

மின்போலுஞ்சாயல்விளங்கிப்பளபளெனப்
பொன்போலிலங்கும்புதுத்தினுசே யன்புறநீர். (ககசுச)

மாணித்தசாயமிதுமங்காதுமங்கிடிலோ
நாணுத்ரவாதியிதுநம்பிக்கை தாணிதைநீர். (ககசுரு)

பார்த்தறிவீரொன்சொற்பழுதுபடாதோர்காலும்
நேர்த்தியிதுவென்னநினைந்துகொள்வீர் சேர்த்தியகைச். (ககசுசு)

சாத்திதைநீர்பார்த்துத்தபவாயளிப்பதையங்
காத்தெதிர்சொலாமலிருகைக்கொள்வோ வாய்த்த (ககசுஎ)

மனம்போனபடிப்பனெனவாய்ப்புறரெட்டித்து
தனங்கவர்தலன்றோர்தரமே யினைந்து. (ககசுஅ)

வகைதெரியாரங்குவருவார்களாகிற்
பகிடியுறப்பேசிப்பகட்டி மிகநீண்ட. (ககசுகூ)

காலங்கிடந்துநைந்தகட்டுக்கிடைகளோயச்
சேலங்குடந்தைத்தினுசெனவுஞ் சாலமுடன். (ககஎ0)

காட்டிமுழநீட்டிநகைகாட்டிமொட்டிப்பாகவிலை
போட்டவர்கள்கண்ணில்மண்ணைப்போடுவரால் கோட்டமொடு. ()

முன்கணக்கிற்பாதிலபம்மோசமுறவிற்பினேயிற்
பின்குறிப்பிற்பாதிலபம்பெற்றிடலாற் றன்கையிரு.(ககஎஉ)

நீட்டுமுதலொன்றும்மிலாபவரவிலொன்றுந்
தேட்டிலைக்கண்டுள்ளஞ்செருக்குளாரய் வாட்டமின்றி. (ககஎங)

எப்பொழுதுமிந்தவியல்பாய்ப்பொருள்கவர்ந்து
செப்படிவித்தைத்தொழிலைசெய்கின்றா ரிப்படியே. (ககஎச)

யாக்ரமஞ்சேர்பொய்யரனேகரிருந்தாலுமதில்
யோக்கியர்களுஞ்சிலர்களுண்டன்றோ ஞூக்குசிவ. (கசஎரு)

கன்னைநகரிற்கணிதனருணாசலமா
லிங்கிதகுமாரனெழில்மாரன் ஆங்கணுல. (ககஎசு)

கெங்குமிசைபெற்றோனிராமாயணப்ரசங்க
துங்கன்முத்துக்கிர்ஷ்ட்ணதுரைபூமான் பொங்கமிகும். (ககஎஎ)

இம்பாபுகழ்சுந்தரமாலீன்றவருணாசலனாய்
யம்பெருமானென்னுமவர்க்குமுன்னோன் உம்பர்பணி. (ககஎஅ)

வெண்ணிமலைசெந்நிமலைமேவும்பொருட்குடையான்
வெண்ணிமலையென்னும்விதரணவான் மண்ணீன்ற (ககஎகூ)

வந்தரிதியானமுள்ளோனாதிமூலேந்த்ரனருள்
சந்ததிநால்வர்க்குட்டலைமையான் புந்தியர்மேல். (ககஅ0)

மாத்தயாவைத்துவளங்குநிதியுடையான்
காத்தயாவென்னுங்கருணைமால் சீர்த்திதிகழ். (ககஅக)

மூவர்கலைவர்த்தகத்தில்மூவாமுயற்சியினார்
பூவுலகோர்மெச்சும்புகழுடையார் யேவர்க்கும். (ககஅஉ)

ஈட்டுமுதலுக்கிலாபமோர்விசமன்றி
நீட்டிவிலையேற்றநெறியுடையார் நாட்டிலொரு. (ககஅங)

சாரமற்றநீசர்முதற்சக்ரவர்த்தியானாலும்
பாரபக்ஷமில்லாதபண்பினரே பாரிற். (ககஅச)

பலசரக்குவிற்போர்பலகாரஞ்செய்வோர்
கலைகலத்தபாத்ரக்கடையார் விலையுயர்த்த. (ககஅரு)

சீமைமுதலானபலதேசசாமான்கொணர்ந்து
காமுறுநற்ஷாப்புக்கடைகாரர் மாமருவு. (ககஅசு)

நெல்மண்டிக்காரர்நிறைதவசக்காரர்குறுங்
கல்மண்டிபிசிக்கடைகாரர் நல்வளமாய்க். (ககஅஎ)

கூட்டுசெட்டவர்க்கமெனக்கூறிவெறுங்கைதனையே
காட்டுகின்றசோற்றுக்கடைகாரர் கோட்டமொடு. (ககஅஅ)

சாய்த்தளக்கும்வாணியர்கள் சாளிகைநெய்க்காரர்மிக
வாய்த்தநவதான்யவகுப்புடையார் சேர்த்திணைக்கும். (௧௧அ௯)

தையல்வேலைக்காரர் தையல்பலருக்குமதி
மையலுறப்பூட்டும்வளைகாரர் செய்யபல. (௧௧௯0)

காய்கறிசாமானிலைதேங்காய்பழம்பால்மோர்பெருகு
காய்தகரலந்தார்க்கடைமுதலாய் ஆயபல. (௧௧௯௧)

வெல்லாத்தொழில்களுமேமாற்றுதொழிலல்லதுகூ
றில்லாத்தொழிலொன்றுமில்லையே தொல்லுலகோர். (௧௧௯௨)

## தீபாவளிப்பண்டிகைவருதலைப்பற்றி

## நாயகி நாயகனிடங் கூறுதல்.

சித்தந்தெளியாமற்பேய்பிடியலமுறுங்காற்
சுத்தமிருந்ததுலாமதியில் மெய்த்திடுதீ. (௧௧௯௩)

பாவளியென்றோர்பண்டிகையீங்குறுதலெனப்
பூவுளர்சொற்கேட்டவொருபொற்கொடியாள் ஆவிதனுக். (௧௧௯௪)

கென்புருகுமென்னவிநயங்களார்ந்தவளாய்த்
தன்புருடனோடுமெல்லச்சாற்றுவாள் பம்புவியில். (௧௧௯௫)

நீடியநன்வீட்டுநிருவாகமின்னணமேடன்
றூடவர்சற்றேனுமறிகில்லார் நாடியதை. (௧௧௯௬)

வாய்ச்சேதியாயுரைக்கவாமெடுக்குமூழ்த்திழுமு
மூச்சாய்மெய்யேசொப்பமுகடுமட்டி யாச்சாவென். (௧௧௯௭)

றுத்தாளுக்கேச்சுமவளப்பனுக்குமப்படியே
பார்த்தார்கைக்கும்படிதூற்றிப் பாத்திரா. (௧௧௯அ)

பாத்திரமேதென்னப்பகுக்காதிகழ்ந்திடுதல்
வாய்த்தபுருஷாள்தன்வழக்கமே யாத்திரமாய். (௧௧௯௯)

நாளையோநாளைமின்றோநாசமற்றதீவாளி
மாளிகையைத்தேடிவருகிறதாங் கேளுமிதற் ௧௨00)

கேதுவொன்றுங்காணேனிதனையலாரிலம்போ
யோதிலுாரல்மத்தளத்தையொக்குமே மீதுநெடுந். (௧௨0௧)

காலந்தவாமற்கருதிவருடத்தொருநாட்
சாலவிவண்போந்துவெகுசம்பமாய்க் கோலமிட்ட. (கஉ0உ)

பட்டுப்புடவையென்றும்பாவுகண்டைச்சோமனென்றும்
மட்டியர்பாவாடைவளையலென்றுஞ் சட்டரசுஞ். (கஉ0ங)

சேர்ந்தகறிவர்க்கமென்றுநீம்பாலடிசிலென்றும்
வார்ந்தபலகாரவரிசையென்றுங் கூர்ந்தலொடு. (கஉ0ச)

துண்டுகிலுஞ்சோரமென்கைநொந்திடவிராமுழுதும்
பெண்டுகளையாட்டிவைக்கும்பேயன்றோ அண்டியண்டிக். (கஉ0ரு)

தொன்றுதொட்டுநாளுந்தொடர்ந்துமனைபூந்துநன்றாய்த்
தின்றுநசிகண்டுசெழித்ததன்றோ யின்றதனைச். (கஉ0சா)

சும்மாபோவென்றுதுரத்தியடித்தாலும்
தும்மானை நேசிமொழியாதே செம்மையா. (கஉ0எ)

யெல்லையுறயற்றவையிலாவடிநுஞ்செங்கெலிருந்
தாலதுகொண்டோர்வாறகற்மலாய் காலேமுத. (கஉ0அ)

துப்புக்கிடையாதுரியபுளிமிளகா
யப்படியேயெல்லாமவதியே கைப்பணவாம். (கஉ0கூ)

நொய்யசிறுகேழ்வரகினுண்ணரியமாவாலும்ரொட்டி
செய்யவுமென்றாலுஞ்செயலிலையே கையினிதி. (கஉக0)

யுள்ளவர்கள்வீட்டினிற்சிற்றுண்டிபலசெய்வர்கணம்
பிள்ளைகள்கண்டேங்கிப்பிதற்றுமே சள்ளையிதற். (கஉகக)

கென்னவகையென்றேயினைந்துநிலங்கீறி
நன்னெறிகளோதிநளினமாய் முன்னின்று. (கஉகஉ)

பாதகண்டிச்சொல்லமணவாளன்கேட்டுவெகு
மூதண்டமாய்க்கோபமுட்டியே யாதுசொன்னாய். (கஉகங)

மந்தரநேர்திண்புயத்தாண்மால்துணைச்சிங்கேந்த்ரனன்று
தந்தசெண்டுவண்டிநெல்லுஞ்சாமானுஞ் சிந்தினையோ. (கஉகச)

அஞ்சாறுவேளையின்னமாகவிலையேமுழுக்க
மிஞ்சாமலேசெலவாய்விட்டதோ அஞ்சாவுன். (கஉகரு)

நெஞ்சுவிருய்தணிக்கநேரினிலாளில்லையென்ருே
கொஞ்சிநீமஞ்சட்குளிக்கிருய்　　வஞ்சமற. (கஉகசு)

விச்சையுடனூழுவோனேழையாருலெருது
மச்சினங்கொண்டாடுமென்றவாறுபோல்　　மெச்சியகம். (கஉகஎ)

கொண்டலவோசற்றுங்குறியாமற்பொல்லாத
வண்டனென்றுஞ்சிந்தைமதிக்காம　　லண்டிநின்று. (கஉகஅ)

தில்லாயக்கட்டுமொழிசெப்புகிருய்வீட்டுநடப்
பெல்லாமறிவேனிருக்கட்டும்　　யில்லமதிற். (கஉகசு)

றெண்டனையில்லாதாற்சிறுதேட்டுக்காகநெல்லைக்
கண்டுங்காணுமலெலேக்கண்மறைத்துக்　கொண்டுபோய்ப். (கஉஉ0)

பாதிகருப்பாதிவிற்றுப்பாழ்ந்தகைசெய்வதுமச்
சேதியெனக்குந்தெரியுமடி　　பேதையிவ. (கஉஉக)

ளூமாண்டியென்னநினைத்துப்பொடிகற்பூரமுதற்
சாமான்களெல்லாஞ்சருவகொள்ளை　　தீமைக்கு. (கஉஉஉ)

முந்துமயல்வீட்டிலண்டிமுண்டைகளேயுட்களவுக்
கந்தரங்கமென்பதுவும்யானறிவேன்　　சந்ததமுந் (கஉஉங)

சிந்தைமகிழ்தொம்பரையின்செங்நெல்முழுதுக்குமோ
ரந்தெனவுநீவந்தவதரித்தாய்　　சிந்தாம. (கஉஉச)

விற்பொருளேத்தன்னுயிர்போலெண்ணியதைக்காப்பவளே
சற்புனிதையென்றுலகஞ்சாற்றுமால்　　தற்பொருளேக். (கஉஉரு)

காவந்துசெய்திருந்தாற்கஷ்டமுற்றவிக்காலந்
தாவந்தமென்னுஞ்சொற்ருனுண்டோ　　பாவியேன். (கஉஉசு)

மெய்வருந்தியெவ்வளவோமிக்கதொழில்கற்றிருந்துங்
கைவருமானங்களைக்காசில்லை　　யிவ்வருடம். (கஉஉஎ)

வெள்ளாண்மையல்லைவிளைவில்லையென்றறிந்தும்
பிள்ளைமதியுடையபேதாயுன்　　னுள்ளமதிற். (கஉஉஅ)

றைக்கவிலையேபழகத்தக்ககிளிப்பிள்ளைதனக்
கொக்கும்விதம்போனுனுரைத்துவந்தும்　　அக்கறைசற். (கஉஉசு)

றேனுமிலையேமினிமேலெப்வவரும்புத்தியென்று
லானமட்டுஞ்சொல்லியலுத்துவிட்டேன்　　மானே. (கஉங0)

மனைத்தக்கமாண்புடையளாகித்தற்கொண்டான்
வனத்துக்காள்வாழ்க்கைத்துணையா மெனப்பலவாய்ச். (கஉஙக)

## நாயகனுக்கு நாயகி தட்டான் சங்கதிகூறுதல்.

சீறிவிழுந்துசினந்துரைக்குங்காலையிவள்
வேறுரையாதச்சத்தால்மெய்யொடுங்கி மீறுசின. (கஉஙஉ)

மாறியவன்சாந்தமடைந்தனைகண்டுள்ளமகிழ்ந்
தூறியதேனென்னவும்பின்னோதுவாள் வீறியன்ற. (கஉஙங)

தேவரீரென்னைச்சிறுதேட்டுக்காரியெனக்
கூவியிரைந்துமிகக்கோபித்தீர் தேவரீருஞ். (கஉஙச)

சத்தியமாயென்காற்படத்தில்மிதித்போர்க்குமந்தப்
புத்தியொருக்காலும்பொருந்தாதே தம்மைநல்லார். (கஉஙரு)

கைப்பிடித்தநாயகனைக்கல்கட்டுபேசிறுதேட்
டெப்படியோசெய்விக்கிழக்கினரு ரப்படியோர். (கஉஙசு)

நல்லகதைகேளீர்நகைக்சாமான்செய்பொற்
கொல்லனிடமெல்லாங்கொடுத்திருந்து மெல்லனிச்சப். (கஉஙஎ)

பூமாந்தினைபோற்பொருபிப்பவைட்டவா
ரோமாந்துநின்றுரியப் புலவன் ஆமொருவன். (கஉஙஅ)

கண்டிப்புக்காரன்கவுரிதிருமாளிகையோ
டண்டிப்பொருந்துமயல்மனையான் கொண்டவனை. (கஉஙகூ)

நம்பியொருகாசுகொடானுடுமிரவலர்மேற்
பம்பிமிகச்சீறும்பணியனையான் வம்பனவன். (கஉச0)

சித்ரமனையாட்டிசிறுதேட்டிச்செய்பவளென்
றெத்தினமுஞ்சண்டையிரணகள மித்தையறிந். (கஉசக)

தாலிக்கணக்கிட்டரிசிசாமான்பலவு
நாலிக்கனைத்தரமாய்நல்குவா னீளநிதம். (கஉசஉ)

கண்டித்தபோதினுமக்கள்ளிசற்றுமஞ்சாமற்
றுண்டித்ததிலுமிகச்சோமாறிக் கொண்டதனைத். (கஉசங)

தந்திரமாய்விற்றுத்தகுந்தபொருளீடுகொண்டு
சந்தைவட்டிக்கீந்துசதமைந்தா யிந்தவிதம். (கஉசச)

அன்கையிருப்புள்ள நருக்காலகஞ்செருக்கும்
றென்செயலாமென்றிதயத்தெண்ணினாள்    தன்பணிகள். (௧௱௪௫)

யாவுமிதுகர்நாடகப்பணிகளானதிலும்
மேவரியமாற்றுமிகக்குறைச்சல்    தேவையுடன். (௧௱௪௬)

பூண்டாலும்வெட்கம்புவியோர்நகைக்கின்றார்
வேண்டாதுருக்கிவியன்புடத்திற்    றாண்டியொளி. (௧௱௪௭)

ரங்கமுறலாக்கியதனோடுநகைமுதற்கும்
தங்கமிகச்சேர்த்துத்தரந்தரமாய்த்    தொங்கவிட்ட. (௧௱௪௮)

காதுக்குக்கைக்குக்கழுத்துக்கிசைந்தபடி
சோதிக்கிரணச்சடாரணிபாய்    வாதுக்குக். (௧௱௪௯)

கூச்சமறப்பூண்டுகுறிப்பாயெவர்களும்பொன்
காய்ச்சமரமென்றுகளிகூர    நாச்சியார். (௧௱௫0)

போலிருந்துவாழ்வமெனப்பூரித்தாளக்கணமே
சாலவொருதட்டான்றனையழைத்தாள்    மேலுமெனக். (௧௱௫௧)

கிட்டநகையுடனுமேலத்தொகைதருவேன்
கட்டுமாயான்சொல்லுங்கணக்குப்போற்    றட்டாமல். (௧௱௫௨)

கோலுநகைபண்ணிக்கொடுப்பாயோவல்லவெடுங்
காலமிழுத்துக்கடத்துவையோ    பாலர்கட்கு. (௧௱௫௩)

மேன்மையகல்யாணமிந்தமாதங்கடைசியிலின்
னன்முகூர்த்தமிட்டிருக்குதுபா    ரிந்நகையை. (௧௱௫௪)

நல்வர்ணமாகநாகசிட்டமுத்தமுடன்
சல்திபண்ணிமுந்தித்தரவேணு    மில்லுடையான். (௧௱௫௫)

காழ்த்தகுணவாணிடமென்கைமுதல்காட்டாமலுமிப்
பாழ்த்தநகையோடைம்பவுன்சேர்த்துத்    தாழ்ச்சியறப். (௧௱௫௬)

பூட்டுவிரொன்றுமயல்பூண்டுவரும்போதுடல்
காட்டிநெடுநோட்கரைத்துவந்தேன்    கேட்டுநகைத். (௧௱௫௭)

தங்கவரும்பேதாயீதார்சொன்னபேய்மதியச்
செங்கோல்லேர்செய்திதெரியாயோ    பைங்கமல. (௧௱௫௮)

மாவனையதேவிமணிச்சிலம்புவிற்கவந்த
கோவலனைமாட்டிக்கொலைபுரிந்தோர்    தாவுபர. (௧௱௫௯)

காயப்ரவேசநிலைகாட்டும்விக்ரமார்க்கனையு
மாயச்சதிபுரிந்தவஞ்சனையோர் வாய்மையினிற். (௧௨௬௦)

பங்கமுறுஞ்சொல்லார்படுமோசக்காரரென
வெங்கும்ப்ரஸ்தாபவசையேற்றமே யிங்குளனோர். (௧௨௬௧)

மூப்புற்றதட்டான்முடிவுற்றநாள்மகனைக்
கூப்பிட்டுச்சொன்னபுத்திகூறக்கேள் வாய்ப்புற்ற. (௧௨௬௨)

சேயேபவமணியேதேனர்க்கதிபதியே
மாயைபலவுந்தேர்ந்தமந்திரியே தாயகட்டில். (௧௨௬௩)

முன்முளைத்துநீண்டமுனைகுழைந்தகாதினிலும்
பின்முளைத்தகொம்பேபெலனலவா வென்னினுநீ. (௧௨௬௪)

கற்றுணர்ந்துதேறிக்கடைப்பிடித்தாயாயினுமென்
சொற்றிறனுந்தேர்ந்துசுவையறிவாய் நற்றவத்தால். (௧௨௬௫)

வண்மையுடன்பெற்றெடுத்தமாதாபிதாவேனினு
முண்மைநம்மள்ஜாதிக்குதவாதே யுண்மையினிம். (௧௨௬௬)

றக்கவரிச்சந்திரனுஞ்சத்தியத்தைப்பேணியந்தோ
மிக்கசெல்வந்தோற்றுவிலைப்பட்டா னிக்கலியில். (௧௨௬௭)

மெய்யொழுக்கத்தார்களுக்குமேன்மையொருநாளுமில்லைப்
பொய்யொழுக்கத்தார்க்கேபொருள்சேரும் பொய்யொருக்கா. ()

லாதிசிவனும்புகன்றானம்புயனுமன்றவ்வாத்தான்
சீதரன்பொய்சொல்லித்திருடினு னுயபெறும். (௧௨௬௯)

செய்யசிறுமாணிடராய்ச்சென்மித்தநாந்திருடிப்
பொய்யுரைத்தாற்போச்சோபுகழ்மோசம் பொய்மகளா. (௧௨௭௦)

சாயத்திலேபிறந்தாளந்தணரிற்பால்குடித்தாள்
மாயக்கண்மாதர்மனைவளர்ந்தாள் தேயமுள்ள. (௧௨௭௧)

தெண்டிசையுஞ்சுற்றியலைந்தேருங்கடையில்நம்மை
யண்டியக்காலையமர்ந்தனளாற் பண்டிவளே. (௧௨௭௨)

தெய்வமட்காகுமவள்சேயாங்களவினையுங்
கைவிடவொண்ணாதுமுன்னோர்கற்பனையே வெய்யகொடுங். ()

தீயகள்வரோடுநம்மைச்சேர்த்தூக்கிப்பார்க்கிலந்தத்
தீயகள்வர்நம்மிற்சிறியரோ தீயகள்வர். (௧௨௭௪)

துஞ்சுதல்சோதித்திரவிற்சோரங்கள்செய்திடுவார்
நெஞ்சுதிடுக்கிட்டுநெடிதொளிப்பா ரஞ்சாநா. (௧௨௭௫)

மப்படியோபோடாவறிவுகெட்டபிள்ளாய்பட்
டப்பகலேயாருமருகிருக்கச் செப்படிவித். (௧௨௭௬)

தைத்தொழில்போலுந்திருடுந்தந்திரத்தைக்கண்டறிய
முத்தொழிலாளர்க்குமுடியாதே யத்தாகீ. (௧௨௭௭)

யோதரியதங்கமுருக்கும்பொழுதுடையான்
ஏதுவுடனேயிருந்துமென்றெரிவான் ஊதழலிற். (௧௨௭௮)

சிட்டைக்கரியையிட்டுக்கிப்பொறியைத்தாவவிடுற்
கிட்டவிருந்தோர்கள்கிளம்புவார் சட்டெனவே. (௧௨௭௯)

தங்கத்தைவவ்விச்சரியானவெள்ளிநிற
மங்கக்கரித்தடவிவைத்துக்கொண் டங்குருகக். (௧௨௮0)

காயுமுலைக்குக்கரியிடுதல்போலுமதைத்
தீயிடுக்கியாலுஞ்செலுத்திவிடாய் ஆயதன்றி. (௧௨௮௧)

யின்னமொருதந்திரங்கேளேழங்குலமளவா
மன்னகரித்துண்டினடிப்புறத்திற் பின்னுருவச். (௧௨௮௨)

சுற்றிவரச்சன்னத்துளையிட்டெவர்விழிக்கும்
பற்றுதலுறாமற்பதுக்கமாய் மற்றதனை. (௧௨௮௩)

வெங்குகையிற்றங்கமெலிந்துருகக்கிண்டிவபோ
லங்கையினுற்சுற்றியலசுவா யங்கதுவும். (௧௨௮௪)

பற்றித்துளைவழியிற்பாய்ந்துள்ளடங்கியிடை
யுற்றிரண்டுமூன்றுவரையொட்டுமே சற்றுமிந்தத். (௧௨௮௫)

தந்தைவெளிகாட்டாயென்றந்தையெனக்காதியினில்
முந்தியுபதேசித்தமூலமந்த்ரம் அந்தோயென். (௧௨௮௬)

தந்தையார்தன்சமர்த்துஞ்சாதுரியவார்த்தைகளும்
இந்திரசாலத்தினியல்முறையும் சிந்தையினி. (௧௨௮௭)

துன்னுசிற்பசாஸ்திரமுணர்ந்துமதிநுட்பமொடு
மன்னுகருக்கட்டியுருவார்ப்பதுவு மென்னுளத்தி. (௧௨௮௮)

லோர்போதெனையின்றவுத்தமனையானினைந்தால்
மாரோடுங்கண்ணீர்வழிந்தோடும் பார்மீதி. (௧௨௮௯)

கவின்குலவநீபழுக்கக்காய்ச்சியெடுத்திந்த
வவன்கண்ணணில்மண்ணையடிப்பாய் தவிர்ந்திலகு. (௧௩௨௦)

வெள்ளிநகையாகில்வியன்செம்பினைக்கலந்து
தெள்ளும்பணிகளைநீசெய்குவா யுள்ளதுபோற். (௧௩௨௧)

றங்கம்பொன்வெள்ளிகளிற்றான் கலப்பிலாதுசெய்தா
லெங்குழந்தாயிதினமக்கென்னமிருக்கும் அங்கவர்கள். (௧௩௨௨)

செட்டிகள்பாழ்காட்டிலந்தச்செட்டிகட்கும்நம்மவர்க்கும்
மொட்டியவுட்பேச்சொன்றுளதலவா செட்டிதட்டா. (௧௩௨௩)

ரொன்றேயொருவர்க்கொருவர்கோட்சொல்வதில்லை
யென்றேமுன்சத்தியமேம்பாடன்றோ ஆன்றிடுநும். (௧௩௨௪)

முன்னைமறந்தெம்பியல்லைச்சம்றும்வெளிவிட்டுனையா
ரன்னவர்க்குநாமுமதுபோலாம் முன்னுதிந்த. (௧௩௨௫)

கட்டுனைமையமீறிக்கலகமிட்டாராகில்வர்
குட்டுகளைநாமுங்குலைச்சுடைப்போம் செட்டிகள்கு. (௧௩௨௬)

துக்குமக்கசாலையர்சூதுக்குமினைபார்த்திடினும்
றுக்குறையொன்றிட்டாலுமொவ்வாதே சிக்குளர்சிமா (௧௩௨௭)

சத்தைதவெளியாக்கித்தலைகுனியச்செய்திடுவே
னித்தருணஞ்சத்தியெனக்கில்லையே யித்தையறி (௧௩௨௮)

யாமலுலகத்தவர்தட்டார்மோசக்காரரெனப்
பேய்மதியாற்றூற்றிப்பிதற்றுகிறார் ராமறியப். (௧௩௨௯)

பாரமிறுகச்சுமந்துபட்டிமாறிந்திரிந்த
சீருமிவர்வாழ்வுந்தெரியாதா பூருவந்திற். (௧௩௩௦)

கட்டினதாலிக்குக்கடைமணியில்லாததுபோ
லெட்டிரண்டும்பூணற்கிடமாச்சு மட்டரிய. (௧௩௩௧)

தங்கநகையாச்சுத்தகுந்தமுதலாக்சுதெழு
மங்குல்படிமாடமனையாச்சுச் சங்கையுடன். (௧௩௩௨)

ஊரவர்கொண்டாடியுறவோங்கவுமிப்போதுசெட்டி
யாரவர்களென்றொருபேராச்சலவா பூரிவினை. (௧௩௩௩)

மாந்தர்களாலன்றோமலிந்தநிதிபெற்றனமென்
றோய்ந்துவிசுவாசமனுவுண்டா போந்துபூரி. (௧௩௩௪)

நன்கயர்ந்தசெட்டிகட்குநம்மாற்சகாயமில்லை
யென்பதும்பின்சொல்வேனிருக்கட்டும் பொன்பணிக. (கஙகரு)

* னுற்கையினிற்காய்ச்சியுருக்கித்தரோமெனவும்
விற்கநகைசெய்துகொடோமீண்டெனவுந் தற்கமுடன். (கஙகசு)

நம்மவரொப்பங்கமீட்டுநண்ணுறுங்காற்பின்னிவர்கட்
கிம்மியுந்தேட்டெய்தற்கிடமுண்டா கம்மியர்கள். (கஙகஎ)

தன்குற்றமேயொழியத்தற்பேணுஞ்செட்டிகள்மே
லென்குற்றநம்புத்தியினமே * புன்கயர்க்குக். கஙகஅ

கூவென்றான்மீதிற்கொடும்பகையென்பாரதுபோல்
நாவொன்றிப்பேசுதலுநன்றலவே மாவணிகர். (கஙககூ)

பொய்ச்செயல்நாமேதூற்றப்போமாமல்லாந்துபடுத்
தெச்சிலுமிழ்ந்தாலெங்கிழிந்துவிழும் மச்சுமண்ணிற். (கஙச0)

றனெடுத்தபொற்பணியின்றன்மையுணராதவர்நம்
பானடித்துக்காட்டியிதைப்பாரென்பார் நீநடிக்கு. (கஙசக)

றுதவுரைகல்லில்லாச்சமாய்பவன்போலேமாத்திப்
பேதையேயீதுசுத்தப்பித்தளையென் றோதியதைத். (கஙசஉ)

தூரத்தேவிட்டெறிவாய்சூதற்றானுண்மையெனப்
பூரிப்பொழிந்தவனும்போய்விடுவான் ஊரிலவன். (கஙசங)

போனவுடனவ்விடத்தைப்பூர்த்தியுறத்தேடியெடுத்
தானதையுமுன்போலதுக்குவாய் தானிதுபோ. (கஙசச)

லனர்நமக்குச்செய்திடுவாரம்புவியோர்தம்பொருட்குப்
பார்வையிடினுமொருபங்காளி சேர்வையிட்டுத். (கஙசரு)

தேசுயாத்தகற்பணிகள்சேரவொருசமயம்
மாசகற்றக்கொண்டுவருவர்கண்டா யேசார். (கஙசசு)

வெடியுப்புவேண்டுமெனமெல்லக்கடத்தி
யுடையான்மீண்டெய்துமதற்குள்ளா யெடுசிலகல். (கஙசஎ)

பற்றுதென்றாசைப்படாதேமடியமுத்துக்
கற்றான்பால்கொள்ளக்கருதுவரோ சொற்றபடி. (கஙசஅ)

---

* உற்கை-தீ. * கையர்-திருடர்.

வேற்றுமையுறுத்தரிப்புமிக்ககறைப்போக்குகளை
மாற்றியதில்லாட்டிமருவிவிடா யேற்றமுள்ள (க௱௪௯)

கூலிகொடுத்தாலுமந்தக்கூலியினால்நம்முடைய
காலக்ஷேபந்தனக்குக்கட்டாதே கோலிநா. (க௱௫0)

யிட்டதேசட்டமதாயாருமென்னசெய்வரிது
கட்டளைத்துரைத்தனத்தார்காலமே வெட்டவிடச் (க௱௫௧)

கர்த்தர்களாறுமுமனைக்காவலாகிகிட்டுநட்டமை
பொற்கலைஞர்கர்த்தாமேலோர்விசம் எத்தலமும். (க௱௫௨)

தற்புகழ்ச்சியோய்க்குசருவைத்ரபூஜ்தராந்
சொற்புலவர்பொன்னளிப்பொருடாமேதீ யற்புகந்து (க௱௫௩)

காடியிசைபாடினலமுண்டாந்தீதியரம்
பாடிலுயிர்மாய்த்துபவுசழியும் நீடுநமக். (க௱௫௪)

கூறருட்கண்வேலுமப்பாவுள்ளேர்ப்பெரியதனைக்
காரருக்குமட்டுமெடுகால்வரிசை புரிநூல்நற்குந் (க௱௫௫)

சொற்றிறவாயாடிகட்குத்தொல்லாசிமேகருக்கு
மொழ்றுமைபோய்முன்றிமொருவாரம் பற்றகுடி. (க௱௫௬)

யானவர்க்குநம்மவர்க்குமன்றேசெம்பாதியெனத்
தானெழுதிவைத்தனர்முதுவரே யானுலும். (க௱௫௭)

காலமறிந்துகவர்வாயென்றேபுகல
பாலன்மகிழ்ந்துபணிவுதலாய போமெயரா. (க௱௫௮)

மேன்மைகளுக்கெவ்விதமென்றேவினைவச்சிறியடா
பார்ப்படுவாயன்னவர்க்குப்பங்கேது பேழைகளைசொத். (க௱௫௯)

தவ்வளவுநம்மதுவேயார்க்குந்தெரிந்ததன்றோ
வவ்வுதொழிற்கல்லாமடப்பயலே யிவ்வுலகி. (க௱௬0)

லெப்படியாகீபிழைக்கப்போராயெனவுதைத்துப்
பொய்ப்படுவான்றன்னுயிரைப்போக்கினன் செப்புமுலே. (க௱௬௧)

மாதேயவனைவெகுவாஞ்சையுறக்கொண்டிடினுந்
தூதேபுரியுந்தொழிலுடையார் கோதே. (க௱௬௨)

நிறைந்தகணபுருகர்நித்திரையிலேனு
மறந்துநிசமுரைக்கமாட்டா ரறந்தவரச். (க௱௬௩)

சூளுற்றவர்போலுஞ்சொற்சாதுரியமுட
ஞளைப்படகட்டியலமலத்தி மீள. (௬௫௫)

மடக்கிப்பொருளைவசப்படுத்தினாளைக்
கடத்துவதில்வல்லாளகண்டர் புடத்தெடுத்தல். (௬௬௬)

காய்ந்தபுவிமன்னராண்மனையிற்பட்டவைத்
தீய்ந்திடும்பொன்சோர்வுக்கிடமிலதாய் வேந்தரன்று. (௬௬௭)

செங்கையில்வாளீந்திரண்டுசேவகர்பாராநியமித்
தங்குநிற்பத்தட்டான்கண்டையமீ ரிங்கு. (௬௬௮)

கறையூர்ந்தகத்திகரம்பிடித்தவாறே
தறைவீரென்றேறதஅரேபாய் நிறைதீர்ந்த. (௬௬௯)

விப்பொன்னிலெட்டுவோயேனுங்கவரிலுன்சிரசைத்
தொட்பென்றுவீழ்த்துணிப்பமெனச் செப்பலுங்கைப். (௬௭0)

போதடக்குஞ்செம்பொனையாத்தேதலைபோமேயெனவாய்
மீதடிப்பான்போலும்விழுங்கிவிட்டான் சூதடர்த்திச். (௬௭௧)

செம்புருக்கியுள்ளேசெலுத்திநிறைகாட்டுமந்த
வம்பர்கள்தன்சூதறியவல்லவ ரிம்பாதனிற். (௬௭௨)

றன்னகத்தைக்கொண்டதட்டார்சங்கடத்துக்கஞ்சியன்றே
பன்னகத்தைப்பூண்டான்பரமசிவ னின்னவர்பாற். (௬௭௩)

றோணமவீந்துதொடர்ந்துதொடர்ந்துநிதம்
வீணையலைந்துமெலிவதினும் பேணுமுத. (௬௭௪)

மத்தனையுமோர்மறையோனங்கையிட்டுநீர்வார்த்துத்
தத்தமதுசெய்தாலுந்தர்மமே யெத்துவழி. (௬௭௫)

வண்டப்பிரட்டர்நயவாக்குறுதியில்லாதார்
கண்டித்துக்கேட்பதற்குக்காலமில்லைத் தெண்டிக்கத். (௬௭௬)

தக்கவதிகாரிகளுந்தந்தநகைவாங்குதற்கு
முக்கமட்டும்பார்த்துமுடியாமல் வெட்கமுற்றுப். (௬௭௭)

பேசாதிருந்துவிட்டார்பேதாய்நமக்கடங்கி
யாசாரிசற்றுமசைவானோ நேசமுள்ள. (௬௭௮)

வர்த்தகர்பானன்னகையாய்வாங்கிப்புனைந்திதனைப்
பர்த்திசெய்வேன்சற்றேபதறுதே கர்த்தரெனும். (௬௭௯)

ஜவிதப்ரமாவெனுங்தேவாமிஷையாற்பூமிசையுற்
றய்விசுவகோத்திரமுடையாரால் வையமிசை. (கஙஅ0)

மின்னுலவுகோவில்குளமேலாலயப்ரதிஷ்டை
மன்னியபூண்தேர்களுயர்வாகனங்கள் பின்னுமுள. (கஙஅக)

வெல்லாச்சிறப்புகளுமெய்திநலம்பெற்றிடுதல்
வல்லாரவர்தொழிலின்மாகூழியன்றோ வல்லாரில். (கஙஅஉ)

ஆற்றலுறுநாற்றொருவராயிரத்திலேயொருவ
ரெற்றமுளநல்லோரிருக்கின்றார் தோற்றமிருங். (கஙஅங)

தென்மதுரைமாநகரிற்றெற்குலவும்வீதியினிற்
றன்மதுரைபோலுந்தழைக்கிருப்போன் பன்மலர்க்காக். ()

கந்தவழுங்கானூர்க்கணபதியாசாரிதிரு
மைந்தர்களிலாறுமுகமாலென்றும் செந்திருவைச். (கஙஅரு)

சார்ந்தசிவகங்கைச்சமஸ்தானராசர்மெய்க்கத்
தேர்ந்தநயவேலைத்திறமையினான் சேர்ந்தொளிரும். (கஙஅசு)

கற்புரநூல்மார்பன்கணபதியாசாரியருள்
சற்புனிதவான்ராமசாமியென்றும் அற்புதமாய்த். (கஙஅஎ)

தெள்ளித்தெளிந்தபுகழ்த்தென்னுகையாகுசேன்
பள்ளித்தெருவிற்பயில்கனவான் ஒள்ளியசீர்த். (கஙஅஅ)

தஞ்சைநகர்வாழ்ராமசாமியாசாரிதவ்
மஞ்சனெனவந்துதித்தவாய்மையினான் விஞ்சுதமிழ்க். (கஙஅகூ)

கல்விபரசங்கமுள்ளான்கற்றோர்க்கமுதமன்னான்
கல்விற்பனனுலகநாதனென்றும் பல்குசுவை. (கஙகூ0)

முத்தமிழ்போல்முப்பொறிபோல்முக்கனிமுப்பால்போலு
மொத்துலகில்வந்துதித்தவுத்தமர்கள் சுத்தமுறக். (கஙகூக)

கோலமணிகுயிற்றுங்குந்தனவேலைத்தொழிலுஞ்
சாலவுநகாயெற்றுந்தாட்டாளர் வேலையினிற். (கஙகூஉ)

கள்ளங்கவடறியார்கன்மஷஞ்சற்றேனுமில்லா
ருள்ளும்புறம்புமொத்தவுண்மையார் வள்ளலென. (கஙகூங)

மெய்த்தபுவிமன்னர்களும்மேன்மைப்ரபுக்களுந்தஞ்
சித்தமதிற்கொண்டாடுஞ்சீர்த்தியினா ரித்தலத்தின். (கஙகூச)

தான்செறிந்துமேவுமக்கசாலையரநேகரிலும்
நானறிந்தமட்டிலிவர்நாணயர்கள் தானுமெனக். (கரு௯௫)

கந்தரங்கபத்தியுளா ரன்னவர்பாலெய்தியிளம்
பைந்தொடிநீசொன்னபடிமுடித்துச் சிந்தையினி· (கரு௯௬)

லன்புருகயானேயணிந்தழகுபார்ப்பேனென்
றின்புறவெங்நாளுமெனையேய்க்கிறார் பொன்புதையல்· (கரு௯௭)

சேரவெடுத்தாலுமவர்செய்பார்நீநாணயமாய்த்
தாரதுண்மையாறூற்றருகிறேன் ஊரிலெனைச்· (கரு௯௮)

சிந்திகைகக்கத்தெருவிலலையவிட்டுப்
பாந்தின்றுவேடிக்கைபாராதே காந்தனே. (கரு௯௯)

பொல்லாவென்றின்னபுகல்போதுடல்குழையப்
பல்லாடிமெத்தப்பயந்தவன்போல் நல்லாய்நீ. (கரு௲00)

சொன்னமொழிசொன்னீரிருசெவியினூராசந்
துன்னியபோற்றேகந்துடிக்குதே நன்னயமுப். (கசoக)

பட்டணத்திலேமூவர்பண்புடையரொன்றுமற்றோர்
கெட்டெணத்தைக்கொண்டகெறுவொன்றுந் தொட்டணைத்த· ()

நாயகன்சொற்கேட்டுநடுங்காதெனைப்பார்த்து
வாய்கொள்ளாவார்த்தைவழங்கினீர் தீயதொழிற்· (கசoங)

சின்னமொறுக்காத்திருட்டுப்பயல்களைப்போ
லென்னையொருக்காலுமனத்தெண்ணுதீர் கன்னக்கோல்· (கசoச)

சாந்துமிடமென்றுஞ்சாந்தாவிடமென்றுஞ்
சித்துவமிதார்க்குந்தெரியாதோ ஆத்தாடி. (கசoரு)

மற்றவனைப்போனினைத்துமாதாபிதாவிடத்துங்
கற்றவித்தைகாட்டுங்கருத்துண்டோ சுற்றிமெல்ல. (கசoசு)

யேய்க்கின்றகூத்திக்கிடுமருந்தையன்றுபெற்ற
தாய்க்கிடுவருண்டோசரசமாய்ப் போக்கிரிக· (கசoஎ)

ளீனத்துவத்தாலிழுக்கேயென்போலனைய
மானஸ்தர்க்கெல்லாம்வசையாச்சே ஞானத்திற்· (கசoஅ)

றேற்றமிலாதுன்கணவன்சீசீயெவரிடத்துந்
தேற்றிலுநம்பிக்கைகிடையாதே மாற்றலரும்· (கசoகூ)

போற்றுபுகழ்நல்லதுக்கோர்பொல்லாதுபோலுமுமக்
கேற்றமணவாளனிவனுமோ சீற்றக். (௧௬௧0)

கடுஞ்செட்டுக்காரனிதைக்கண்டிடிலப்பாடா
குடும்பத்தினேருங்குழப்பம் நெடுங்காலம். (௧௬௧௧)

பேச்சுவிளைந்துபிணக்காயிருவருக்கும்
மாச்சரியச்சண்டைவளருமே மூச்சுவிட்டால். (௧௬௧௨)

வம்புவருமேவெளிக்குவாராவிதமிதனை
யெம்பிறர்க்குங்காட்டாதியற்றியே ரொம்பவுநாள். (௧௬௧௩)

மிச்சமிலையஞ்சாறுவேளையிற்காதுங்காதும்
வைச்சதுபோற்றூரேன்மகனை யச்சமற்றுச். (௧௬௧௪)

சும்மாகொடுப்பீருஞ்சொற்படியேநற்பணியா
யெம்மாலோரட்டியிலாதீந்திடுவே னும்மவர்க. (௧௬௧௫)

ளற்புதநீராடையிலோடாணிகழன்றாடல
கற்பணிபோச்சென்னக்கலையுற்றூர் சிற்பவிதிச். (௧௬௧௬)

சூத்திரத்தாலன்றிச்சுழலாத்திறகணியாய்
வார்த்துவலுவாயிறுக்கிமாட்டுவேன் சேர்த்தியுள்ள. (௧௬௧௭)

மாதிரியைக்கண்டுமடவார்பொருமையுற்றுக்
காதலைப்போட்டுக்கசக்குவார்கள் சோதனையில். (௧௬௧௮)

மின்றிகழ்மாற்றொன்பதுக்குமேலிருக்குஞ்சேதாரங்
குன்றியிடையேனுங்குறைவுபட நென்றைக்கும். (௧௬௧௯)

கட்டுக்குலையாதுகண்காரச்செட்டிகள்பால்
வட்டமறக்காட்டிமதிப்பிடுவீர் மட்டுமலர். (௧௭00)

மாதாவனையமயிலேயுமதுகழகுக்
கோதாபணிதியிடைகயுருக்கிப் போதுமிடை. (௧௭0௧)

யிக்கணமேதாரேனிதுபோகக்கையிருப்பு
ரொக்கமுள்ளதெல்லாமுதவுவீர் லக்கினநல். (௧௭௦௨)

வேளையிதேதங்கம்விலைவாகவாங்கிவந்து
காணமுதல்வேலைநடத்துவேன் கேளம்மா. (௧௭௦௩)

வீட்டுக்குமெத்தவிருந்தினர்வந்தார்களிதற்
கீட்டியவெற்கூலியினிலேதேனு நீட்டுமென்று. (௧௭௦௪)

காலமிட்டுச்சொல்லவிவள்தன்னினைச்சமூப்பாலே
மாலையிட்டோர்கஞ்சாதமாநீவி யோலமிட்டுக். (௧௭௦௫)

கொல்புலியாத்தோல்போர்த்தகொள்கையான்றன்னைமெத்த
நல்லணிவனென்றேநணிமதித்துச் சொல்லரிய. (௧௪௨௬)

பொற்குழையயலோடுபலபூஷணமுநல்கிவிட்டாள்
மற்கடத்தையொத்தவறிவில்லாள் சிக்கி. (௧௪௨௭)

யுருவியகோலானுரூபர்சகடயோகஞ்
சருவியதாமெனவுந்தட்டான் விரைவுடன்றன். (௧௪௨௮)

வீட்டிற்புகுந்துரியமெல்லியற்குக்காட்டியவள்
வாட்டமுற்றகண்ணீரைமாற்றினாள் நீட்டியநற். (௧௪௨௯)

றண்டுலமுங்காய்கறிகள்சாமான்பதார்த்தமெல்லாங்
கொண்டுவந்துமாளிகையிற்கோட்டினான் கண்டையிட்ட. (௧௪௩0)

சோமன்வயிரக்கடுக்கன்சோதிதிகழ்மோதிரத்தில்
மாமணியுந்தீட்டிவனைந்திட்டா னாமுடையாட். (௧௪௩௧)

கந்தவனைவிட்டானலங்காரப்பட்டெடுத்தான்
மெத்தநகைபூட்டிமினுக்கிவிட்டான் நத்துமெ. (௧௪௩௨)

குழந்தைகளுக்கேற்றகுறும்பணிகள்பூட்டி
வழங்கவுமாமீதுமகிழ்ந்தான் கிழம்படுதாய். (௧௪௩௩)

சாடையிலேடார்த்துமகன்றன்பாலெருங்கியிந்த
வாடையிலேநான்கிடந்துவாடையிலே மேலடியவ. (௧௪௩௪)

வஞ்சனைமைக்காரியதிபசும்புக்காரிமகா
பஞ்சரிப்புக்காரியயில்க்காரிக் கஞ்சியந்த. (௧௪௩௫)

காச்சியானுக்குமட்டுநல்லினையோநானிருக்கும்
காட்சியைநீகண்ணாரக்காண்கிலையோ வாய்ச்சமெடுங். (௧௪௩௬)

காலமகவில்லாமற்கன்றியுனத்தந்தனொடு
சாலவும்யானேமெலிந்தலங்கள்சுற்றி மேலெனவுங். (௧௪௩௭)

கண்டகண்டகோவிலுக்குங்காணிக்கைதான்செலுத்தி
யண்டரியதீர்த்தங்களாடிவந்துந் தொண்டர்களா. (௧௪௩௮)

மாண்டிபரதேசிகளுக்கன்னம்படைத்துமிக
நீண்டவரசுக்குநிதநீர்வார்த்துந் தேண்டரிய. (௧௪௩௯)

தீக்கையுபதேசமுற்றுஞ்சேனைவிரதம்புரிந்தும்
ஜெக்கரியகெற்பமுறலானேன் ஆக்கையினிற். (௧௪௪0)

பச்சைநரம்பெய்கமதிபத்துஞ்சுமந்துநிறைந்
தொச்சமறப்பெற்றேனுன்னைமணிபோம் செச்சைநறு (௧௪௪௧)

சீராட்டித்தாராட்டிநீடம்புலிகாட்டிப்
பாராட்டிச்சீராட்டிப்பாதுற்றேன் ஓர்வேளை. (௧௪௪௨)

நோயணுகக்காணில்மனநோனொருமருந்துக்
காயடவிதோறுமலைந்துழல்வே னேயாம (௧௪௪௩)

லெத்திறத்தும்பட்டேனிராப்பகலோர்போதிலுங்கண்
ணித்திரைசற்றுண்டாகினவுண்டா முத்தனையாய். (௧௪௪௪

நீபிறந்தோராண்டுநிறைவுறுமுன்னுந்தை
தீபறந்தகாட்டினிடைச்சென்றெரிந்தான் சோபமுற்றும். (௧௪௪௫)

வண்ணக்கலையிழந்தமான்போலொளிமழுங்கி
மண்ணிற்படிந்தமணியேபோல் பெண்மைக (௧௪௪௬)

குரியநிறைதவறுதாழியத்திற்புக்குண்
டரியபலகஷ்டமடைந்தேன் இருநிலத்தி. (௧௪௪௭)

லுற்றுருக்குற்றுருறவோமற்றல்லதுணை
யற்றோர்க்குதவிபுமலர்புண்டோ பெற்று. (௧௪௪௮)

ரிருந்தும்பயனிலவாலெவ்வுயிருங்காக்கும்
பரம்பொருளேதஞ்சமெனப்பற்றி வருந்தியுனைப். (௧௪௪௯)

பொன்னுலகரித்துப்போஷித்துருகிருந்து
மன்னர்மக்கள்போலும்வளர்த்தேனே தென்மொழியுஞ். (௧௪௫௦)

சாதித்தொழிலும்வெகுதந்திரமுமந்திரமும்
போதித்துவைத்தனர்நம்புண்ணியர்கள் காதலநீ. (௧௪௫௧)

யென்னுஞ்சிறுபருவத்தேநன்மணமுடித்துக்
கண்ணுற்களித்துக்கதிபெறுவா னெண்ணியெண்ணி. (௧௪௫௨)

யெத்தனையோபெண்ணமைந்துமென்னுளமொப்பாமலுஞ்சொந்
தத்திலிவள்சாத்திமகளாதலால் மொத்தையிரு. (௧௪௫௩)

நான்குவருடஞ்சமைந்துநாற்றமெடுத்துக்கிடந்தாள்
நீங்கியழுளிநிறங்கெட்டாள் யான்கருத்துற். (௧௪௫௪)

றன்றேபெண்பாவமிவட்காதாரம்வேறிலைகம்
சொன்னபடிகேட்குஞ்சுகிர்த்துமுண்டாம் பின்னடியிற். (௧௪௫௫)

பெண்ணடியில்லாநமக்குப்பின்றளர்ந்தகாலமநி
லுண்ணொடியாதொட்டுமுதவுமென்றும் பெண்ணீ. (கசருசு)

ரணைகடந்தநீலிக்கழுகில்லாதேனும்
குணமிருந்தாற்போதுமெனக்கோரித் துணிப்புறநான். (கசருஎ)

வேணுமென்றுகொண்டுவெந்தவெங்கஞ்சிறுக்கிமக
ளாணவமாயென்னையவமதித்தாள் கோணிமன. (கசருஅ)

நாணித்தலைகவிழநாவெடுத்துப்பேசவொட்டா
தாணித்தரமாயடக்கிவிட்டாள் வீணிலவச். (கசருகூ)

சேட்டைபுறப்பேசித்தெருவிலுள்ளபோர்கடமைக்
கூட்டமிட்டென்குட்டைக்குலைக்கிறாள் கோட்டிகொண்ட. (கசகூ0)

நாயினுங்கேடானேனோர்நாளேனுமத்தையென்று
வாய்குளிரச்சொன்னவசனமுண்டோ பேயுமஞ்சக். (கசகூக)

காத்திரநீலிக்கோலங்காட்டியவளாடுகின்ற
கூத்துக்குமத்தளநீகொட்டுகிறாய் யாத்தாளொன். (கசகூஉ)

னன்புடையாட்கேனீயடங்கிநடந்தாயிலையென்
றென்பொடியத்தீட்டவுன்றாலேலாதே வன்புரையா. (கசகூ௩)

யேண்டியகங்காரமுனக்கிவ்வளவாவென்றுபுடைத்
தாண்டடக்கினலலவோஅஞ்சுவாள் ஈண்டெதிர்நீ. (கசகூச)

பார்த்திருக்கப்பேசும்பழிப்புரையைக்கேட்டுமொரு
வார்த்தைகண்டிப்பாய்ச்சொலவும்வாயிலையே சேர்த்த. (கசகூரு)

மனையாளைமஞ்சத்தில்மைந்தனைநெஞ்சத்தில்
வினையாளைவேலைமுடிவில் வெனமுறியோர். (கசகூசு)

தக்கவுரைதேர்ந்துஞ்சரணஞ்சரணமென்றே
விக்கியவள்காலடியில்வீழ்கின்றா யெக்குலத்தி (கசகூஎ)

லானாலுமுன்போலறிவிலைக்காணேனீ
தானுபெண்கொண்டாய்தரணியினில் மேனாளோர். (கசகூஅ)

வண்ணாரட்டையல்மனையாடனைக்குறித்தன்
றெண்ணுதிராமனையுங்கென்சொன்னான் கண்ணுறக்கும். (கசகூகூ)

நாட்டமவள்கண்டுநடுநடுங்கவேண்டாமா
ஓட்டையெனக்கால்வழிநீரோடாதா சேட்டைபண்ணித். (கசஎ0)

தாங்குவதனூலுன்றலையில்பிளகாயரைத்துத்
திங்கரியசட்டஞ்செலுத்துகிறாள் — ஈங்கிவள்தன். (கசஎக

னாக்கையழுத்துநறுக்கினாலன்றோவென்
தீர்க்கவயிராக்யசினந்தீரும் — யேற்கையினீ. (கசஎஉ)

சன்னதங்கொண்டாடத்தலையணையின்மந்திரத்தா
லென்னவிதஞ்சொல்லியுருவேற்றினளோ — பொன்னினுநல். (கசஎங)

றாயலவாவென்றுபக்ஷாத்தாபமின்றிநேற்றுவந்தாள்
மாயையிலேவீழ்ந்துமயங்கினையே — தீயர்களு. (கசஎச)

மேசயிடங்கொடுத்தாயென்செய்வாயானுமதைப்
பேசுவதிலென்னபெறப்போறேன் — பீசிலுனக். (கசஎரு)

காறுமுழந்தான்பெரிதோவப்பாநீநல்கிலெனக்
காறுமுளந்தானென்றாளாங்கெழுந்து — சீறியொரு. கசஎசா)

## மாமிக்கும் மருமகளுக்குஞ் சண்டை.

வன்புலிபோற்பாய்ந்துமருமகள்தன்மாமிமுன்னின்
றென்புகன்றாயின்னமியம்புவாய் — முன்னமிரு. (கசஎஎ)

காலுவருடஞ்சமைந்துநாற்றமெடுத்தாளென்றும்
மேலழகில்லாமூளிவேசையென்றும் — ஞாலமதிற். (கசஎஅ)

சீர்துவாரற்றுத்திரிந்தவளைக்கொண்டுவந்து
வாய்த்தநம்மனையில்வைத்தனென்றுங் — காந்தனிடஞ். (கசஎகூ)

சொல்லிப்பரிசழித்ததோஷிக்குரங்கேயுன்
பல்லைப்பிடுங்கவொருபல்லிலையே — யல்ல. (கசஅ0)

தடக்கற்றநெஞ்சைவகிர்ந்தாறுகூறாக்கித்
தொடக்குற்றநாவைத்துணிப்பேன் — விடக்கெடுத்த. (கசஅக)

வங்குப்பற்றிப்பேய்நாயேவாயிலிடும்பானையே
சங்கைகெட்டுப்போனாயேதானேயே — பங்கமுற்ற. (கசஅஉ)

வெங்கல்கழுதாய்விருதா * வெறுங்கழுதா
யெங்கெங்கழுதாயிரப்புணியே — பொங்கும்பா. (கசஅங)

அட்டிவளர்த்தாலுமுயிர்தீர்விடமளிக்கும்
மோட்டரவையொத்தமுழுநீலி — நாட்டிலுனை. (கசஅச)

---

* வெறுங்கழுது - வெறும்பசாசு.

நல்லவளென்றுருனைப்பார்நாறச்சவமேயுன்
சில்வாயைப்போர்த்துத்திருப்பட்டா வல்லிருளிற். (கசஅரு)

பூசலிடுபேய்க்கணமேபோழ்வாய்க்கிழட்டோரி
பேசுவதைப்பாரப்பாபெப்பெப்பே மாசுபட்ட. (கசஅசு)

வாருகோலாலுடலைவாட்டியெடுப்பேனுனக்கிங்
கார்சலிகைசொல்வாயறையிரேன் பாரெனவே. (கசஅஎ)

காறியுமிந்தாளிவளுங்காறியுமிழ்ந்தாள்மருகி
தூறியிரைந்தாளிவளுந்தூறினுள் மீறி. (கசஅஅ)

யிடித்தாள்மருமகளங்கிண்டெழுந்துமாமி
கடித்தாளொருகரத்திற்கவ்வித் துடித்தவளும். (கசஅகூ)

பற்றிமயிரைப்பிடித்தாள்பாழ்ங்கிழவிவவ்வால்போற்
றொற்றிமயிரைப்பிடித்துத்தொங்கினுன் சிற்றிடையிற். (கசகூ0)

றுத்தாரிப்பட்டுமெல்லச்சோர்ந்துநழுவியந்த
வித்தாரிகால்சறுக்கிவீழ்ந்திட்டா ளத்தருணம். (கசகூக)

மாலேறிக்கொண்டமருமகளைப்போட்டமுக்கி
மேலேறிக்கொண்டாள்விசைக்கிழவி கோலியழு. (கசகூஉ)

தாட்டியாளுலும்தயங்குசமயத்தினல்ல
வேட்டைவந்துசாய்த்தால்விடுவளோ ஆட்டமெல்லாம். (கசகூ௩)

கண்டுவிலக்கியவன்காதலியைச்சீர்திருத்தி
நண்டுகளைநீக்கிநொசிவகற்றிப் பண்டுபெற்ற. (கசகூச)

## தட்டான் தாயைக்கோபித்தல்.

வன்னைமேற்கோபமதிகரிக்கப்பின்னுமன்னை
தன்வதனநோக்கியிவைசாற்றுவான் யென்னிருகண். (கசகூரு)

ணுட்டியுடனீசரியோஅஞ்சாக்கிழப்பதரே
போட்டிபண்ணிச்சீரழிஞ்சுபோகாதே தாட்டுறுத்தும். (கசகூசு)

பாதுகைபோலொத்துப்படிந்துநடவாவிடிலென்
பேதையவளைப்படித்தாண்பேசுவாள் வாதுபடு. (கசகூஎ)

பேயிறைஞ்சுநீர்மையினாள்பேசியெனைத்தூஷணமா
யாயிரம்வைதாலுமெனக்கானந்தம்    வாயிற். (கசகூஅ)

றிருகிருந்தசொல்லாற்சிலர்புறணிபேசி
யருகிருந்தாற்போதுமெனக்கன்பே    யிருள்செறிந்த. (கசகூகூ)

பாதகமலம்படிந்தபாவியேன்மீதிலவள்
பாதகமலம்படிலென்பாவம்போம்    கோதி. (கரு00)

லவளேயென்றெய்வமவளேயென்செல்வ
மவளேயென்கல்விநிறையாஸ்தி    யவட்கினமுந். (கரு0க)

தங்கப்பணியிடுவேன்தாவுகுழற்பூமுடிப்பேன்
குங்குமப்பொட்டிட்டுமுத்தங்கொஞ்சுவேன்    செங்கையினால். ()

மஞ்சணீரைத்துங்கொடுப்பேன்வண்ணமலர்க்கால்பிடிப்பேன்
இன்சொற்படிநடப்பேனென்னிஷ்டம்    நெஞ்சிலுனக். (கரு0௩)

கேண்டிபொறுமையிதற்கேனோவயிற்றெரிச்ச
லாண்டான்கிடைத்தவளதிர்ஷ்டம்    வேண்டியொற்றைக் (கரு0ச)

கால்மேற்றவமிருந்துகர்ப்பமுற்றுப்பெற்றாளாம்
வால்தலையைக்கிள்ளிவளர்த்தாளாம்    பாலப். (கரு0ரு)

பருவமணஞ்சூட்டியெனைப்பார்த்தாளாமுள்ளத்
தருமையுறக்கொண்டாடினாளாம்    மருமகளை. (கரு0சு)

வைத்தவரிசைக்குமதியாதிவளையவ
ளத்தையென்றுசொல்லியழைக்கலையாம்    மெத்தமெத்தத். (கரு0எ)

தோதவித்துப்பேசுஞ்சுனைகெட்டமூளியுனக்
கேதமைத்தநான்கினிலொன்றேனுமே    காதகியுன். (கரு0அ)

கோலவுடல்கூனிக்குறுகித்தளர்ந்துமின்னஞ்
சாலவகங்காரந்தளர்ந்திலவே    வாலிபரா. (கரு0கூ)

யெண்ணரியபேர்மடிந்தாரியாதோவுன்வல்லுடலை
மண்ணரியுங்காலம்வரவிலையே    இண்ணரியவெங். (கருக0)

கூற்றுவனுமுன்னுயிரைக்கொள்ளாதகலின்று
ஆற்றியநின்கொடுமைக்கஞ்சியன்றோ    வேற்றுருவ. (கருகக)

நீலியெனவந்துதித்தாய்நீதொலைந்துபோமளவு
மோலமிட்டபூசலொழியாதே வாலொடுக்கிப். (௧௫௧௨)

பேசாதேபோவெளியிற்பேயேயெனச்சினந்து
கூசாதேபூதிக்கொடைகொடுத்தான் நேசு. (௧௫௧௩)

மருமகனையன்றுமருவீடழைத்தான்
பரிசனமற்றியார்க்கும்பகர்ந்தான் மருகனுக்கு. (௧௫௧௪)

நற்சரிகைக்கட்டுவர்க்கநல்கினான்றன்மகட்குப்
பொற்சரிகைப்பூண்பலவும்பூட்டினான் பற்பலகாற். (௧௫௧௫)

பந்திவிருந்திட்டான்பலகாரவர்க்கமிட்டான்
புந்திமகிழ்சீருதவிப்போக்கினான் சந்ததமும். (௧௫௧௬)

வாதாட்டுவேசையர்கள்மாயப்படுகுழிக்குஞ்
சூதாட்டுங்கோலித்தொடர்புற்றான் காதாட்டிச். (௧௫௧௭)

செல்லநகைபூணச்சிறுதேட்டுச்செல்வியன்னாள்
நல்கும்பொருளனைத்தும்நாசமாய் வல்லிலங்கிற். (௧௫௧௮)

## நகைசெய்யக்கொடுத்தவள் தட்டானைக் கேட்குதல்.

தட்டானையுண்கனிபோற்கையிலொருகாசுமில்லா
தோட்டாண்டியானானொடுங்கினான் சூட்டு. (௧௫௧௯)

நகைமுடிந்ததாவெனவுநங்கைவரிலெல்லா
நகைமுடிந்ததென்னநடித்துப் பகலிரவும். (௧௫௨௦)

பட்டரைவைத்தேவேலைபார்க்கிறதுபோலுமொன்றைத்
தட்டுவதுஞ்செம்புருக்கிச்சாய்ப்பதுவு மட்டமுலீற். (௧௫௨௧)

பித்தளையைக்காய்ச்சியிந்தப்பேதைசெவிவிடைக்கச்
சுத்தியல்கொண்டடித்துவைக்கிறதும் மெய்த்திடுமுன். ()

றேட்டில்நகைசெய்யாதேசின்னாளிப்படியே
நீட்டுவல்லாரென்றுகம்பிநீட்டுவதும் மீட்டிவனோ. (௧௫௨௨)

யேறிட்டுப்பாராமலேங்கியபின்னற்கொடியை
யேறிட்டிருப்பவன்போலேய்க்கிறதுஞ் சீறியதைக். (௧௫௨௩)

காட்டென்றுரைக்கிற்கடுகடுத்துப்பேசியே
காட்டமுடனேர்தகட்டைக்காட்டுவதும் திட்டிநகை. (கருஉரு)

வேலையெலாந்தீர்ந்தினிமேலிரண்டுநாட்பிடிக்குங்
கூலியினிற்சொச்சங்கொடாததேன் எல்லையொடு. (கருஉசு)

இட்டவட்டமாயொழுங்காய்ச்சேர்மானமாக்கியதை
யொட்டியபின்றேனுமுருப்படியாய்க் கிட்டுமெனச். (கருஉஎ)

சொல்லிவெகுநாட்கடத்தித்தோகையினிலேசில்விட்டாள்
மெல்லவிதைவிட்டுவெளியேறிச் செல்லுவதே. (கருஉஅ)

## தட்டான் ஊர் விட்டோடுதல்.

பேரளப்பென்றோர்ந்தவன்பெண்டீர்க்குமட்டும்வற்புறுத்திக்
கேரளத்தைநோக்கினைச்சுக்கிண்ணினனே பாரியதன். (கருஉகூ)

## நகைக்காரி புலம்பல்.

பொன்னிழந்தமங்கையிந்தப்போர்க்காளிபோனவிடந்
தன்னையறியாமற்றடுமாறி யென்முதலைத். (கருகூ0)

தட்டானென்றெண்ணியல்லோசாதித்தேன்கட்புலனிற்
றுட்டனேயெங்கும்ன்றுசாதித்தா யெட்டாநாட். (கருகூக)

போட்டுவிடுவேனெனவும்போதித்தசொற்போலும்
போட்டிபண்ணிவாயில்மண்ணைப்போட்டனையா வீட்டிலுந்தன்.

மங்கையுனைக்காணனென்றுமாரீசம்பண்ணுகிறா
ளெங்கேபறந்தாயிடந்தெரியேன் சிங்கலுற்ற. (கருகூகூ)

கொள்ளைக்கழிச்சலுனைக்கொண்டுபோய்விட்டனவோ
துள்ளத்துடிக்கச்சுருண்டாயோ கள்ளரவம் (கருகூச)

பற்றிப்பிய்ந்தனவோபாரச்சடாமுனிதா
னெற்றியுனைப்பாய்ந்தெகிறினனோ வெற்றியுன். (கருகூரு)

மீதுவிழுந்தனவோவெந்துகரித்துகவிப்
போதிபமனூரிற்புகுந்தனையோ ஆதிநகை (கருகூசு)

முற்றுங்கவர்ந்துவெறுமூளியாக்கினையே
பற்றியெரியுதடாபாழாவாய் பெற்றமகன். (கருஙஎ)

தன்றலையின் மீதடித்துச்சத்தியமுஞ்செய்தனையே
நன்றுடையானென்றலவோநம்பினேன் என்றலைவன். (கருஙஅ)

புற்றுக்குரைத்ததுபோதித்தபுத்தியெல்லாஞ்
சற்றுமதியாதுவிட்டேன்சண்டாளி மற்றுமிந்த. (கருஙகூ)

ஊரிலுள்ளபாவிகளுந்தண்மையுணராத்தாரிலையே
யாருஞ்சத்ராதியெனக்காளுரே போராடிப். (கருச0)

பற்பலநாளென்கணவன்பல்லைக்கடித்தீந்த
சொற்பச்சாமானதிலுஞ்சோமாறி யற்பகலா. (கருசக)

பேயாயெறும்பாயிதுகாலந்தேடியதைப்
பேயாங்குகாத்திருந்தபெற்றிபோம் றேயாமற். (கருசஉ)

பையடக்கமாகப்பவுன்பவுனாய்வைத்திருந்த
கையடக்கமெல்லாங்கவிழ்த்தேனே வையமதிற். (கருசங)

நீதறவீயார்பொருளைத்தீயார்கொள்வாரெனவு
நீதிமொழியென்னினிசமாச்சே காதலனே. (கருசச)

வேற்கையிலேதுப்மாவிராமனேபொருனேமுன்
மூர்க்கனவன்பொல்லாமுரடனே தோற்குமிதைக். (கருசரு)

கேட்டாலேயாகிற்கிடுகிடுக்கவேமூணும்
போட்டுக்கடாவிப்புடைப்பானே மூட்டிவசை. (கருசசா)

மாற்றுமுறைப்பேசியெந்தன்வங்கிஷத்திலுள்ளவர்க்கு
மேற்றயட்டுமேற்றியிறக்குவனே தூற்றிமொத்தி. (கருசஎ)

வாயிலவனேர்ந்தபடிவைதாலும்வைதிடட்டும்
பாயிலிலென்விட்டப்படுக்கானே நோயென்ப. (கருசஅ)

தெத்தனையுற்றாலுமருந்தேயுண்பதில்லையிச்சா
பத்தியத்துக்கல்லோபயந்துநா னித்பாதி. (கருசகூ)

பொன்னுக்குப்பொன்னிழந்துபோகசுகமிழந்தின்
னென்னத்துக்காய்நானிருக்கிறேன் அன்னன்னே. (கருரு0)

சுற்றத்தார்க்கிந்தேனேகுழ்கருப்பானைவர்தார
மற்றவர்க்கேதேனுமளித்தேனோ மற்றுமடன். (கருருக)

கோவில்குளமுண்டுபெண்ணிக்கோடிபலன்பெற்றேனே
பாவியிலும்பாவியெனப்பட்டேனே தீவினையே. (கருருஉ)

னென்செய்வேனென்செய்வேனென்றுருகிக்கன்றியவள்
பன்மூன்றுநாளாய்ப்பரிதபித்துப் பின்னிதனைக். (கருருங)

கொண்டவற்குச்சொல்லமனங்கூசிப்பயந்தமை
கண்டகனுப்போலுங்கலங்கினளே மண்டலத்தி. (கருருச)

லிப்படியேமாதரெழிலார்ந்தமுற்பணியுங்
கைப்பொருளுந்தோற்றக்கழிந்தவரா யெப்பொழுதும். (கருருரு)

பொற்பிழந்துசித்தப்புலனிழந்தங்கூணிழந்து
பற்பிளந்துகூவிப்பரத்தைராம் சற்புருடர். (கருருசு)

சீருயர்ந்தாரேனுந்திகழ்பணியிற்சிந்தையுண்டோ
நாரிகட்கேனிந்தநகைமயக்கம் நாரியர்கள். (கருருஎ)

நாணமடமச்சம்பயிர்ப்பென்னுநால்வகையாம்
பூணையணியாய்ப்புனைந்தறனைப் பேணியுந்தன். (கருருஅ)

கற்பியல்வழாமற்கடிமனையைச்சுத்தமிட்டுப்
பொற்புடனூடோறும்புனலாடி யிற்புகுந்து. (கருருகூ)

சட்டரசவுண்டிதயாரித்தவர்கணவற்
கிஷ்டமுடனூட்டலியல்பன்றிச் செட்டிகட்டான். (கருசு0)

வீட்டேகெதியாய்மெனக்கெட்டலைந்துசுடு
காட்டேபோமட்டுங்கலன்கலனென் றூடவனை. (கருசுக)

மோதும்பிடாரிகளைமுற்றுந்துறந்தவன
மீதுறையும்வாழ்க்கைமிகநன்றே தோதகஞ்செய். (கருசுஉ)

மாதர்மனைமிதியேன்வாயுறவுஞ்செய்தறியேன்
காதலனைப்பேணுங்கவலையன்றி யாதுங். (கருசுங)

குறியேன்கொடுங்கூற்றுயிர்கொண்டுபோம்போ
தறவென்றிவேறுதுணையாமோ திறமையுணர்ந். (கருசுச)

தில்லுக்கிசைந்தொழுகாளேற்றமிகுகூற்றமெனுஞ்
சொல்லுக்கிடம்படுத்திச்சோராமல் செல்லுஞ். (கருசுரு)

குமியேபோலாதாமுற்றும்மிதயமேற்கத்
தமியேனடாத்திவருந்தன்மை கனைசான்ற. (கருசாசா)

சித்தமறிவீரிதுநாட்டீராக்குடும்பபா
ரத்தையும்மிலேற்றியமிழ்த்தாம லத்தனேயும். (கருசாஎ)

யானேபொறுத்துநின்றேனல்லதுவேறும்மிடையா
தேனுமொருதொந்தரவுஞ்செய்திலேன் மாநிலத்தோர். (கருசாஅ)

சித்தமகிழ்ந்தியற்றுந்தீபாவளிப்பெருநா
ளித்தலத்தினேயிராவெய்தலா லத்தைதையிவர் (கருசாகூ)

மேனலஞ்செய்யாதுமிகச்சுருக்கிச்செய்தனவொன்
றீனமெவர்சொல்வர்நமதிஷ்டமே யானதினு (கருஎ0)

லுள்ளதுகொண்டேபுரிகுவோமென்றிவனுரைக்க
வுள்ளமகிழ்ந்தன்னவனுமோதுவான் றுள்ளி. (கருஎக)

நரகாசுரன்மடிந்தநாளிற்பெருமான்
சரணம்புயமலரிற்றாழ்ந்து மரணமுறு. (கருஎஉ)

மின்னாளேநன்னாளாயெங்குங்கொண்டாடவரந்
தன்னாற்படைத்திருக்குந்தன்மையால் இன்னநல. (கருஎங)

மன்னுபுண்யகாலமருவுபலனேப்பெறநா
னென்னவகைசெய்வேனிளமயிலே பொன்னுடையார். (கருஎச)

## நாயகன் நாயகிக்கு லேவாதேவி விஷயங்கூறல்.

தன்பாற்கடன்வாங்கித்தான்புரிவோமென்னிலது
வன்பாய்விளைந்துவருங்கெடுதி பொன்கேட்பாற். (கருஎரு)

கெவ்வளவுசொத்திருக்குமென்பதையாராய்ந்துநன்றாய்
யொவ்வியசொத்தாயிரத்துக்கோர்நூறே வவ்வுதற்குப். (கருஎசா)

போதுமெனக்கொண்டுமக்கிப்போதுதுகைநல்குதற்கிங்
கியாதுமிலேயாகிலிருந்தாலும் ஓதுமொரு. (கருஎஎ)

நூற்றுக்குக்குன்றுதுநோக்கப்படிகொடுப்பேன்
ஏற்றமில்லைநூற்றுக்கிரண்டனையாம் போற்றுமதை. (கருஎஅ)

யாறுமாசக்கெடுவிலாய்ந்துசெலுத்தாதுவிடி
லூறில்கடன்பத்திரமுற்பத்திமுத      லீறுவரை. (௧௫௭௯)

ஐந்துவட்டியாகவுமவ்வாறுமாத்தைக்கொருக்கால்
முந்தைமுதலோடுமுதலாக்கி      யிந்தவித. (௧௫௮௦)

மாச்செலுத்தவேண்டுமீதன்றிமறுபேச்சிலையென்
றார்ச்சிதமாய்ச்சொல்லவவனேற்பியே      வாய்ச்சபடி. (௧௫௮௧)

பத்திரமுமீடுகண்டுபோங்காய்ரிஜிஸ்தர்செய்து
மத்தொகையிற்கால்வாசியாமுசிதம்      பத்திரத்தின். (௧௫௮௨)

கொள்கிரையம்நெட்டெழுத்துக்கூலிரிஜிஸ்தர்ச்செலவோ
டெள்ளரியசேவகர்க்கீனும்செலவு      துள்ளுவண்டி. (௧௫௮௩)

வாடகைமற்றின்னசெலவாமென்றுங்கள்ளிமிச்சங்
கூடியதைக்கையிற்கொடுத்தபின்னர்      நீடிநாட். (௧௫௮௪)

கேளாதுவிட்டுக்கெணிதவட்டியேறுமட்டும்
வாளாவிருந்தவாயிதா      நாளோர்ந்து. (௧௫௮௫)

சேர்ந்தமுதலத்தனைக்குஞ்சீவில்வழக்கிட்டுமிகத்
தேர்ந்தசெலவோடுமதைத்தீர்ப்பாக்கி      யாந்தரங்க. (௧௫௮௬)

மாகச்சபுத்திவாரண்டுப்பியோனேடுதன்
பாகத்திருவர்களைப்பாலித்து      வேகமுடன். (௧௫௮௭)

சென்றிடர்சித்திபெறச்செய்வீரென்றேவவவர்
பின்றிடவொன்றுவிழும்பேரிடிபோ      லன்றுபுகும். (௧௫௮௮)

தாடுகளைமாடுகளையாஸ்திகளைவீடுநுழைந்
தோடியுப்புச்சட்டிவரையோடுமுதல்      நீடுமனை. (௧௫௮௯)

காணிகளையாவுங்கவர்ந்துகுடியோட்டிவிட்டார்
கேணியவன்குடும்பங்கெட்டனவே      நீணிலத்தி. (௧௫௯௦)

லிப்படியேபல்லாரிவர்பாற்கடனேற்றுத்
துப்புரவாய்க்கெட்டார்சொலவரிதே      ஒப்பரிய. (௧௫௯௧)

பானையப்பட்டுந்துரைகள்பால்வலியச்சென்றுசிலர்
கீளுமனேவர்த்திகழ்செலவுக்      காள்வினையாய். (௧௫௯௨)

நாங்கள் தருவோமிக்குகல்குமுதலுக்குவட்டி
தாங்களென்னபோட்டாலுஞ்சம்மதமே யோங்குபணம். (௧௫௯௩)

காசுபெரிதல்லக்கனமுள்ள தங்கள்சித்த
நேசமதேகோடிநிதியாகும் வீசுமுதல். (௧௫௯௪)

நூற்றுக்கனாவீதம்நோட்டெழுதித்தந்திடில்யா
மேற்றமிகுந்ததுகையீகுவோம் தோற்றமுள்ள. (௧௫௯௫)

மாமதுரைசென்னைமருவும்பிறுங்கிரங்கோன்
பாமருவுபம்பையுயர்பங்காளம் க்ஷேமமிகு. (௧௫௯௬)

நாகப்பூர்சிங்கப்பூர்நாகைதிருநெல்வேலி
வாகொப்புகொச்சிமலையாளம் மாகொழும்பு. (௧௫௯௭)

தில்லிஐகிராபாத்துசித்தூர்கடப்பைமுத
லெல்லுலவுதேசமெல்லாமெம்புறக்கந் தொல்லுலகி. (௧௫௯௮)

லெவ்விடத்துக்காணுலும்யாங்கள்தருமுண்டியலே
யவ்விடமெல்லாஞ்செல்லுமாகையாற் செவ்வியநற். (௧௫௯௯)

சித்தம்போல்யாங்கள்திறம்பாதொழுகுவமென்
றெத்தியிவர்சொல்லுமிழுக்குரையை நத்திநித. (௧௬௦௦)

மல்காமற்சொற்பசொற்பமாகத்தொகைவாங்கிப்
பல்காலும்நோட்டெழுதிப்பாலிக்கப் பில்குசிறு. (௧௬௦௧)

தூறல்பெருவெள்ளமெனத்தொக்கிப்படர்ந்தனபோ
லூறிலக்ஷலக்ஷமாயோங்கினவே மாறியிவ. (௧௬௦௨)

ரீட்டுதுலைவட்டியிரண்டரைதிப்போதுறலாற்
காட்டுமெரைவட்டியினிக்கட்டாது நோட்டுகளை. (௧௬௦௩)

யொன்றாய்த்திரட்டியொரேபத்திரமாக்கிப்
பொன்றுதிரண்டேனும்போடுங்கள் துன்றுவள. (௧௬௦௪)

மேந்துசமுத்திரத்துக்கேறல்குறைவில்லெனபோல்
வேந்தர்களுக்கீதோர்விஷயமா ஆய்ந்துசித்தம். (௧௬௦௫)

மாமகிழ்ச்சிகூர்ந்துமறுபத்திரமெழுதித்
தாமதமில்லாதுதருதிரெனப் மாமுகடும். (௧௬௦௬)

நீள்சிலைப்பேனுங்மிண்டிக்கறிப்பனபோற்
சூளிலர்விடாமற்றொடர்ந்துபற்றுக் கேளிரென. (கசு0எ)

விண்ணவர்கணம்பாலியம்பிநின்றகட்டுரையும்
பின்னதற்குமாறுபட்டபேதகமுந் தன்னுளக்கிற்· (கசு0அ)

கண்டுணர்ந்துமற்றிவர்சங்காத்தமினிப்போதுமெனக்
கொண்டெழுகால்வாட்டிகுறிப்பிட்டுத் தண்டமிழிற். (கசு0கூ)

தீர்க்கமுடையான்சிவகங்கைவாழிசுலா
மார்க்கமதினின்றவரன்முறையான் கார்க்கடல்சூழ். (கசுக0)

வையம்புகழுமகம்மதிசுமால்நெடுநாட்
செய்யுந்தவத்தில்வந்தசீராளன் துய்யநெறிச்· (கசுகக)

செல்வத்துரைத்தனத்தார்செய்தசட்டம்லாக்கள்முற்றுங்
கல்விற்பொதிந்தகளஞ்சியவான் பல்குபல. (கசுகஉ)

பத்திரங்கள்சாசனங்கள்யாகசுவிகாரமுயில்
எத்தனையோலாவுக்கிசைந்தபடி சித்தமொத்து· (கசுகங)

முற்றீட்டலேயசலாய்முன்னிமுடிக்குந்திறவான்
கற்றீட்டமேவுந்தொடர்பினன் கொற்றமிகு. (கசுகச)

மன்னவர்கொண்டாடுமெதாருசிக்கந்தரெனு
மின்னிசையான்றன்னையினிதழைத்தே யன்னவனும். (கசுகரு)

பத்திரமுந்தீட்டிப்பயில்ரிஜிஸ்தர்செய்துநல்கச்
சித்திபெற்றோமென்னுஞ்செழிப்புளராய் தத்தமூர். (கசுகசு)

சென்றிருந்தார்செலும்வாயிதாப்படிமுன்
மன்மேறிக்கோர்ட்டில்வழக்கிட்டே வென்றபெரு· (கசுகஎ)

மான்களென்றுமெண்ணுமல்வன்ஜபுத்திக்கட்டளைகொண்
டாங்குபுகுந்தேறியரண்மனையைப் பாங்கொடுசூழ்ந்· (கசுகஅ)

தேற்றவிலைபெற்றபொருள்யாவுங்கவர்ந்துகொடுங்
கூற்றமெனக்கோர்ட்டிற்கொடுபோகி மாற்றமின்றி. (கசுகூ)

பின்னிதவேலத்தில்விட்டும்பெட்புறுஜமீன்சிலதைச்
சின்னபின்னமாக்கிச்சிதறிவிட்டா ரின்னவர்கள்· (கசுஉ0)

புன்மையுலகத்தவாமேற்புல்லுருவியென்றறிந்தும்
நன்மதியுண்டாவதொருநாளுமில்லை மென்சிறையாட். (௧௬௨௧)

## முதலாளியைவஞ்சித்து கடன்வாங்குதல்.

காட்டிகலையாதுமுட்டைதானெடுப்பான்காற்செருப்பை
மீட்டொருவன்றான்கவர்ந்தவிந்தைபோல் நாட்டவரை. (௧௬௨௨)

யெத்திமுதல்சேர்த்தவனையெத்தத்துணிந்துகடுஞ்
சித்தனொருவன்சிறந்தசெல்வனெனப்பாய்த் தத்திமிகத். (௧௬௨௩)

தூண்டுபெரியேறிச்சுடர்வேகடட்டணிகள்
பூண்டிருவரேவல்புரிந்துவர வீண்டிமுத. (௧௬௨௪)

லாளிதனைக்கண்ணுற்றளாவிப்புகழ்ந்துமையிர்
நாளிலுறவுற்றதுநற்றவமே கேளுநமக். (௧௬௨௫)

காஸ்தியளவிலையானாலுமிதுநற்சமையம்
பூஸ்திதியாங்கொள்ளும்பொருட்டுற்றேன் தீர்த்தபதி. (௧௬௨௬)

ஞாயிரத்திற்பாதிநம்பாலானமற்றப்பாதியைநீ
ரீயுமுசிதங்கால்சேர்த்தெண்ணம்போ லாயவட்டி. (௧௬௨௭)

கூட்டியொரேமொத்தங்குறித்ததினத்தினம
தாட்டலைவர்தன்பாலனுப்புவோம் மீட்டுகெடுத். (௧௬௨௮)

தாண்டிஞற்பத்ரஞ்சனித்தமுதலுடையார்
வேண்டும்போதைந்துவட்டிவீதமா யாண்டுதொறும். (௧௬௨௯)

வட்டிக்குவட்டியிட்டுவாஜீபியாய்ச்செலுத்தக்
கட்டுப்பாடுற்றேங்கருத்திலெனப் பொட்டிமகன். (௧௬௩௦)

வீசங்காசேனும்விடாமேலழுத்தமுள்ளவனை
யாசையெனும்பம்பரத்திலாட்டியே மாகுழன்று. (௧௬௩௧)

மக்குப்பிடித்திருக்கமாயமென்னசெய்தானோ
சொக்குப்பொடிமருந்தைத்தூவினனோ சிக்கிமுழுக். (௧௬௩௨)

கல்லானநெஞ்சுங்கரைந்துமெழுகாயுருகிப்
பொல்லாதகாலப்புணர்ப்பினா லொல்கியவன். (௧௬௩௩)

சொத்தொன்றும்பாராமற்றொல்லீடுங்காட்டாமற்
பத்திரமுந்தீட்டிப்பணமீய — வித்தொகையிற். (௧௬௩௪)

கால்நஷ்டியாமெனக்குக்கைமேலுமக்கிதில்முக்
கால்நஷ்டியாமென்வுங்கைகாட்டி — மேலுமினி. (௧௬௩௫)

யுன்னாலியன்றதுபாரோகோவெனவுளத்துற்
றன்னூரார்புக்கானகமகிழ்ந்தே — பின்னரிழி. (௧௬௩௬)

வானகெடுஞ்சூதுவிளையாடல்விலைமாதர்மது
பானமதில்மூழ்கிப்பணமுழுதுந் — தானிழந்து. (௧௬௩௭)

வீணாயுற்றவனைமிக்கமுதலாளிதினம்
வீணாயுற்றுவெறிதலைந்து — நாணமுறக். (௧௬௩௮)

கெஞ்சியடிக்கடிபோய்க்கேட்டவுடனேயவனும்
வெஞ்சமுறச்சீறிவெகுமிடுக்காய் — வஞ்சகநீ. (௧௬௩௯)

## முதலாளியைத்தூஷணமாய்த் திட்டுதல்.

யெப்பத்தொகைகொடுத்தாயேதுமுழுமோசமிது
பொய்ப்பத்திரமோபுதிப்பித்தாய் — தப்பிலியென். (௧௬௪௦)

கையெழுத்தேபோலுமிதுகற்பனைபாரிப்படியா
வையகத்தையெத்திமயக்கினாய் — செய்திடுமிப். (௧௬௪௧)

போர்ஜரியின்குற்றமிதேபோதுமுன்னைவேலைசெல்விடேன்
வேர்வொழுமாட்டிவிலங்கிட்டுச் — சார்ஜ்பண்ணித். ௧௬௪௨

தீட்டியோரேழ்வருடந்தெண்டிப்பேன்டியாம்பகர்நம்
வீட்டுளேன்வந்தாய்வெளியேகில் — கோட்டுக்குப். (௧௬௪௩)

போய்வழக்குச்செய்வையங்குப்போந்துநெஞ்சையீர்ந்துனது
வாயில்மண்ணைப்போட்டுவருகிறேன் — றேயமதிற். (௧௬௪௪)

செங்கோற்றுரைத்தனத்தார்செய்தசட்டதிட்டமெலா
மங்கோர்ந்தேன்முற்றுமவதானம் — இங்லீஷிற். (௧௬௪௫)

பீயேபீயல்முதலாய்ப்பேர்பெரியதேர்ச்சியுற்றி
ராயபகதுரெனும்பேரெய்தினேன் — நேயமுள்ள. (௧௬௪௬)

லாயர்களென்பாலணுகிலாப்பயின்டின்றும்பரியத்
தாயபொருடேர்ந்தனர்களாதலால் நீயோ. (௧௬௪௭)

விழுக்குடையசுத்தமுட்டாளென்னுடன்வாதித்து
வழக்கைச்செயிக்கவோவல்லாய் பழக்கத்தா. (௧௬௪௮)

வின்னபாரிஸ்டருனக்கேற்பட்டுவந்தாலுஞ்
சின்னபின்னமாக்கியதைச்சேதிப்பே ஊரிங்கிலத்தில் (௧௬௪௯)

முந்தியதாம்பூலமுதல்நிம்ரென்றாலகி·
லெங்திறமைநீகேட்டதில்லையோ யிந்தவித்தை. (௧௬௫௦)

யெங்கேபடித்தாயெவருனக்குப்புத்திசொன்னு
ரங்கேபோய்ச்செய்வாயதுபலிக்கும் வெங்கொல்லர். (௧௬௫௧)

வீதிதனிலூசிவிலைவிற்றால்விலைப்போமோ
யேதெனைநீமற்றவர்போலெண்ணியோ சோதித்தா. (௧௬௫௨)

யப்படியாசெய்திநல்லதாகட்டுமபார்சமத்தைத்
தப்படியிம்மட்டாசதிமோசங் கப்படியாம் (௧௬௫௩)

கொட்டினுற்றேளின்குணமறிவாரிக்கலியிற்
கட்டுரைசேர்நல்லதற்குக்காலமில்லை துட்டர்மித்ர. (௧௬௫௪)

பேதத்தாலுன்மதியைப்பேதிக்கச்சூதுவித்தை
போதித்தார்தம்மைப்புகன்றிடா யேதவனைச். (௧௬௫௫)

சும்மாவிடேன்வலுவிற்றாண்டில்மீனைப்பவிழுத்
தம்மாவென்றேங்கியலறியழப் பம்முதலா. (௧௬௫௬)

யேவுதற்குற்றத்திற்கிருகால்விலங்க டியா
தேவிடிலென்றீரமிருந்தென்னபயன் மாவலிய. (௧௬௫௭)

ரெல்லோருமென்னேடெதிர்த்துமுடியாதுகடற்
கல்லோலமென்னக்கலக்கமுற்றார் வெல்லுமெனப். (௧௬௫௮)

† பாறொருத்தன்மேற்பாயும்பான்மையெனவந்தாய்நீ
வேறொருத்தனைல்விடுவேனோ தேறவுநீ. (௧௬௫௯)

---

* கப்படி-கொடுக்கு. † பாறு-பருந்து. ஒருத்தல்-யானை.

யற்பனமக்கீடிலனென்றந்தோ தயவுவைத்து
வற்புறுத்தல்பண்ணுதுமன்னித்தேன் சற்பனையாய்த். (௧௬௬0)

தொட்டிலையுமாட்டித்துடையினிலுங்கிள்ளுகின்ற
பட்டிமக்களுரிற்பலருளரால் கெட்டவர்கள். (௧௬௬௧)

சொல்வார்த்தைகேட்டுச்சுகமிழந்துபோகாதே
நல்வார்த்தையாகுமென்சொல்நம்புவாய் செல்போதக். (௧௬௬௨)

கையிருப்பையார்க்குங்கடனுடன்கொடாமலினிப்
பையிருப்பிற்கட்டிப்பதுக்குவாய் பொய்யிலையான். (௧௬௬௩)

செப்பியநன்மார்க்கந்தெரிந்தனவோநீயிங்கு
கப்புச்சிப்பென்றுசத்தங்காட்டாம லப்புறம்போ. (௧௬௬௪)

வென்றுபலவாறுயெடுத்தேறிப்பேசமனங்
கன்றிமுதலாளியிருகாணநிங்க நின்றுநகி. (௧௬௬௫)

## முதலாளிமனம் வருந்துதல்.

எண்ணுதுமெண்ணியிடைந்திப்பொருளைக்கூட்டிதற்குப்
பண்ணுதசெட்டுகளைப்பண்ணிமனம் புண்ணாய்ப். (௧௬௬௬)

தலைதூரதேசமெல்லாஞ்சுற்றித்திரிந்துக
கலைவாய்க்கடம்குளமிழந்திப் பலதொல்லைப் (௧௬௬௭)

பட்டேனுழன்றேன்பரதவிக்கப்பெண்டிர்பிள்ளை
விட்டேனலைந்தேன்மெலிந்துநான் கஷ்டமுடன். (௧௬௬௮)

னுண்ணுதிரவலர்வந்தாலென்றுறற்குட்டியிட்ட
பெண்ணைப்போற்சீறிப்பிதற்றியே மண்ணனிற். (௧௬௬௯)

படைத்தமுதலையிந்தப்பாவிதனக்கேயொப்
படைத்துமுதலைநொந்தேனந்தோ இடைக்கரிய. (௧௬௭0)

இஷ்டரைவட்டிக்கங்கியுமெனக்கேட்டவர்க்கா
கட்டுமென்றுநாளைக்கடத்தியே ‡ தட்டல்வட்டிப். (௧௬௭௧)

பேராசைபூண்டுபெருத்ததொகையிழந்த
சீராளனென்போற்றெளிஞ்ஞரார் பார்மீது. (௧௬௭௨)

---

‡ தட்டல்-ஐந்து

நீதவட்டிக்கியாதநீதவட்டிக்கிந்தமுத
லாதல்போற்றேன்றியழியுமெண வேதநா. (கசுரு)

லாய்ந்திருந்துமாசைக்களவில்லையென்பனபோ
லோய்ந்துமதிகெட்டேனுணங்கினேன் வாய்ந்தவிநம் (கசுஎச)

## முதலாளி தெய்வபிரார்த்தனை பண்ணல்

பிந்திரனீடேறவெழுபாரமமீறக்
கொந்தளிக்குமன்பர்குறைதீர வந்துதித்த. (கசுஎரு)

பன்னிருகைவேலாபழிக்கஞ்சுங்தேவேமீ
னன்னவிழியாய்கூடலம்பிகாய் முன்னே. (கசுஎசு)

வடங்காரலேத்துயிலுமாலேசீரிந்துக்
கடன்காரனெஞ்சைக்கரைத்துக் கொடுஞ்சனியன். (கசுஎஎ

வட்டியொன்றும்வேண்டாமுன்வாரிக்கொடுத்தமுதல்
மட்டும்வந்தாற்போதும்வழக்கிலேயே நஷ்டத்தாற். (கசுஎஅ)

* நேலிக்கையும்றிடுமென்செங்கைவசமாக்குதிரேல்
நாலத்தோர்பங்குமக்குநல்குவேன் மேலுற்ற. (கசுஎகூ)

பொன்னுபரணம்புயங்காபரணமுடன்
சொன்னபிஷேகமிட்டுச்சூட்டுவேன் முன்னோர்ந்த (கசுஅ0)

காணிக்கைக்கெல்லாங்கணக்கிட்டுவட்டியுடன்
பேணிச்செலுத்திப்பெருக்குவேன் வேணியினில. (கசுஅக)

திங்களணிமாரியற்குத்திட்டிக்கிடாயும்வெட்டிப்
பொங்கலிட்டுங்கோவிற்புதுக்குவே னெக்குடியைக். (கசுஅஉ)

## முதலாளி கோர்ட்டில் வழக்கிடுதல்

காப்பாற்றுமென்றுகனதெய்வம்போற்றியுயர்
தாப்பானநூயஸ்தலம்புகுந்து தீர்ப்பாக்குநு. (கசுஅங)

சாரந்தெரிந்தவக்கீல்தம்மையடுத்துண்மையிலோர்
வாரமதிற்கோட்டில்வழக்கிட்ட னேர்பிரதி.(கசுஅச)

---

* தேலிக்கை-கணக்குறைவு

வாதிக்கறிக்கைமுந்திவந்ததுகண்டேங்கியிதற்
கேதுசெய்வோமென்றிவனுமெண்ணியே          சூதுந். (கசுஅரு)

## பிரதிவாதி சாக்ஷியேற்படுத்தல்.

இருட்டுமுருட்டுமிகத்தோந்தகசவஞ்சப்
பிரட்டரிடமடுத்துப்பேசி          மிரட்டுமிதி. (கசுஅசு)

லென்தரப்புச்சாக்ஷிகளாயெண்ணியுமைக்கோருகிறேன்
நன்றிறமையோடிதுபோற்சாற்றுவீர்          முன்பவர்கள். (கசுஅஎ)

கற்பனையாயிப்பத்திரங்கணிந்ததேதியினி
லப்பீல்விஷயமொன்றையாலோசித்          திப்பிரதி. (கசுஅஅ)

வாதியுடன்யாங்கள்சென்னைவைகியதெதார்த்தமந்த
வீதியிலுள்ளார்க்கும்விசிதமா          மோதுமிவன். (கசுஅகூ)

பொன்னுடையானல்லபுகழ்தீரசத்தமுள்ளான்
பன்னுமறமுள்ளான்படிறுளாயான்          இன்ன. (கசுகூ0)

கடன்வாங்கலுண்மையென்றுங்கட்டுப்பாடான
படுமோசத்தாலியற்றும்பண்பே          யுடையதென. (கசுகூக)

நீவிரிருவருந்தானிச்சயமாயச்சமற்றுங்
கேவறாற்சாக்ஷியியம்புவீர்          சிவில்முன்னைம். (கசுகூஉ)

பூதத்துக்கொல்காமற்பொய்யையொரேமொழியாய்ச்
சாதித்தாலெவ்வழக்குந்தள்ளலாந்          சூதுற்ற. (கசுகூங)

வாதிவக்கீலும்மைமருள்படக்கிராசுபண்ணிப்
பேதிக்கச்செய்துபிரட்டுவான்          போதிலுளம். (கசுகூச)

கன்றியுணர்ச்சிகெட்டுக்கைமறந்துமெய்மறந்தங்
கொன்றுகிடக்கொன்றையுளறிவிட்டு          நின்று (கசுகூரு)

விழியாதீர்மெத்தவிழிப்பாய்நான்சொன்ன
மொழிபோலுஞ்சாக்ஷிமொழிவீர்          வழுவிதென. (கசுகூசு)

நீரஞ்சவேண்டாம்திகழ்சீமைலாயர்களை
யீரங்கிபேசவிழுக்கிறேன்          நேரே. (கசுகூஎ)

மனுவாதிவக்கீல்தனக்கும்வாய்பூசி
யனுசரித்துக்கொள்வோமடக்கி          மலகார. (கசுகூஅ)

வாஸ்தவமாயுந்தமக்கோர்மாசெய்தாதெய்திறுமென் றுஸ்திமுற்றும்பாராதழித்திடுவேன் தாத்தேரி. கசுசுகூ)

யாட்டுமுடந்தனக்கோராளைப்பலிகொடுப்பேன் வாட்டமினியேனுமருளாதீர் கேட்டீரா. (கஎ00)

யிவ்வழக்கைப்பற்றிநமக்கிஷ்டரோடுபேசியகால் மைவளைக்கைமாதர்மருணீங்க மெய்வளர்த்து. (கஎ0க)

## சாகூிகளுக்கு குலதெய்வம்வந்து சொன்னதாய் தயிரியங்கூறல்.

நம்புகுலதெய்வமின்றுநாடியருள்கூர்ந்தெனது தம்பிதுரைச்சாமிதன்மேற்சன்னதமாய்த் தும்பிகொட்டி. (கஎ0உ)

மூதண்டமாயிறங்கிமோதியெனைப்பார்த்துறுமித் தீதண்டுஞ்செய்கைதெரிந்தாயா நீதம்பி. (கஎ0ஈ)

யேண்டாயெனைமறந்தாயித்தனையுஞ்செய்தவனுன் தாண்டாயென்பூசைதவிர்ப்பனவோ மூண்டவுன்பங். (கஎ0ச)

காளியுடன்சண்டையிட்டஞ்சாருண்டளவுமென்னை யேளிதமாய்த்தேடாதிருந்துவிட்டாய் நீளியவுன். (கஎ0ரு)

முன்னவர்கள்பூசைமுறைதவறுதெஞ்ஞான்றும் நன்னயமாய்க்கொண்டாடிநண்புற்று ரன்னவர்கள். (கஎ0சு)

பூமியினிலிட்டவித்தும்பொன்னுய்விளையவிஷ்ட காமியங்களெல்லாங்கதித்தோங்க மாமகிழ்ச்சி. (கஎ0எ)

யாயவர்க்குநானேயருகிருந்துவேண்டியசக காயமுறச்செய்துகாப்பாடிவந்தேன் நீயொருத்தன். (கஎ0அ)

நல்லகுடிக்குநடுநாயகம்போலுஞ் செல்வமகன்வந்துசெனித்திட்டாய். தொல்லுலகிற். (கஎ0கூ)

றெய்வமிகமேலாலயந்தொழுகைசெய்யநன்றென் றவ்வைநூல்கற்றுமலைக்கழித்தாய் கவ்வையினுல். (கஎக0)

கைகந்தவுனக்கின்றுவரும்நாளைவரும்புத்தியென்று புத்தியிலிந்நாளும்பொறுத்திருந்தேன் வந்துவந்து. (கஎகக)

பண்ணாட்கனவிற்பகர்ந்துமிகழ்ந்தாயினிமே லெண்ணற்பொறுக்கவியலாது தன்னகத்தால். (கஎகஉ)

விஞ்சுசுடர்கான்றிடுதென்வீட்டுவிளக்கென்றுமுத்தன்
கொஞ்சிடிற்சுடாமற்குளிருமோ நெஞ்சினிலன். (களஎகங)

புற்றவனீயானாலுமுள்ளறிவுகாட்டிவைத்தேன்
மற்றுனக்கிப்போதுபுத்திவந்தனவா மூமற்றும். (களஎகச)

பொறுத்தேன்பிழையனைத்தும்புண்படவுன்சிந்தை
வெறுத்துக்கவலைகொள்ளவேண்டா முறுக்கித். (களஎகரு)

துயர்ந்தவெதிரிதனைத்தோற்கடித்துன்பக்ஷம்
ஜெயந்தந்தேனென்றுகரந்தீட்டி நயந்திடவென். (களஎகசு)

கைமேலடித்துன்கருத்துநிறைவேறியபின்
ஐயப்படாமலெந்தனாலயத்தில் மெய்யாய்நீ. (களஎகஎ)

சொல்லியசொற்போலுந்துலங்கியபூங்கப்பரையாம்
நல்லபெரும்பூசைநடத்துவையென் றெல்லவர்க்கும். (களஎகஅ)

நின்றுபரிபூரணமாய்நேர்ந்தபலகேள்விசொல்லி
யன்றுமலையேறியமர்ந்ததே நன்றொடறங். (களஎககூ)

காதுகலிகாலமிதிற்கண்கண்டதெய்வமிதைக்
கோதுகுறைசொன்னார்குடிகெடுமே ஓதிலெங்கள். (களஎஉ0)

தெய்வத்தைப்போலுமொருதேவுண்டோவாய்திறந்தாம்
கைமேற்பலிக்குமெந்தக்காரியமும் உய்தலினிப். (களஎஉக)

பெற்றேன்பயமொழிந்தேன்பேச்சுப்போலுந்தமக்குச்
சொற்றவருவண்ணந்தொகைகொடுப்பேன் முற்றறிந்து. (களஎஉஉ)

பாருமெனச்சொல்லியவப்பாசாங்குப்பேச்சைநம்பி
சேர்பட்டாரிந்தவிருமூடர் கோருமிரு. (களஎஉங)

## சாக்ஷிகளிலொருவன் கூடாதெனல்.

சாக்ஷிகளிலேயொருவன்தந்திப்பானீதில்நமக்
கேச்சுவருமன்றிநலமெய்தாதே வீச்சனபொய்ச். (களஎஉச)

சாக்ஷியுரைத்தோரும்லஞ்சந்தான்வாங்கினோருமந்த
மாச்செயிலாருமுக்கால்வாசிப்பேர் சீச்சியவன். (களஎஉரு)

ஆயிரந்தாலுமொப்பலாகாதேயொப்பிடில்நம்
வாயிலேமண்விழுந்துமானம்போர் தாயமனு. (களஎஉசு)

நீதியிற்கோரட்டார்நியாயவதிகாரிகளென்
றோதிவித்தலோகமெல்லாமோசையாய்ச் சூதுகொண்டு. (௧௱௨௭)

தப்புப்பிரியாதுபண்ணல்தஸ்தவேசுப்பிரட்டுச்
செப்பருபொய்ச்சாக்ஷிதிருட்டுநடை கைப்படுத்து. (௧௱௨௮)

நம்பிக்கைமோசமனநாணுவிபசாரங்
கும்பிட்டகொள்ளைகொலைமுதலாம் வம்புகளைத். (௧௱௨௯)

தீர்க்கவிசாரித்துத்தெளிவாயவரவர்க்குத்
தாக்குகுற்றங்கண்டுதகுந்தபடி தூக்குடனே. (௧௱௩0)

பங்கோற்பயிண்டுபெருவிலங்குமாட்டியிரு
செங்கால்தளரச்சிறைப்படுத்தல் பங்கவப. (௧௱௩௧)

ராதந்தனைவிதித்தல்நாட்டுகின்றவம்பினிலே
வேதனையாய்க்கட்டிமிகவடித்தல் ஈதான. (௧௱௩௨)

தெண்டனைகளெல்லாந்திரணபக்ஷபாதமின்றிக்
கண்டினைகள்செய்யுமிந்தக்காலத்தில் கொண்ட. (௧௱௩௩)

பொருட்காசைபூண்டுநாம்பொய்சொன்னாலென்ன
திருக்காய்வருமோதெரியோம் தருக்கமிம்ம். (௧௱௩௪)

நாளைக்கோரட்டினிலேநம்மைப்பிடித்தபொல்லா
வேளையென்னவந்துவிடியுமோ கோளெனவும். (௧௱௩௫)

## மறுத்துஞ் சம்மதித்தல்.

விம்மியுரைத்தான்மறுத்துமிக்கபணத்தாசையினால்
மமமரடைந்துமதிகேடாய்ச் சம்மதித்துக். (௧௱௩௬)

கோரட்டுவாயற்குறுகியுபயகட்சிக்
காரர்களுமெய்தியங்குகாத்திருக்கப் பார்புரக்கும். (௧௱௩௭)

## கோர்ட்டார் தீர்மானம்.

வல்லகோரட்டார்மனுவுபயவாதிகள்தன்
சொல்லுரையும்பத்திரத்தின்சூழ்ச்சியையும் நல்குபல. (௧௱௩௮)

சாக்ஷிகளின்வாய்மொழியுஞ்சாராமிசைந்தவெல்லாம்
ஷர்ச்சிதமாயாலோசித்துண்மைதனை மாட்சிமையோ. (௧௱௩௯)

டாய்ந்துவா திக்கேயனுகூலத்திர்ப்புரைத்து
மாந்துமெதிர்வா திகுற்றமன்னித்தே யேந்துமர. (களசாO)

சாட்சியர்முன்னைச்சமின்றியப்பிரமாணம் புகன்ற
சாட்சிகளாம்மொண்டுதடியருக்கும் மாய்ச்சலுறக். (களசக)

கோரவிலங்கிட்டுக்கொமூத்ததலைமண்சுமக்கக்
தீர்மர்னமேழ்வருடஞ்செய்தனரே நேரிலினைதக். (களசஉ)

## தெண்டனைபெற்ற சாக்ஷிகள் வருந்தல்.

கேட்டவுடனன்னோர்கெடியாலிடியடர்த்து
வீட்டுதருவெனவும்வீழ்ந்தலறி மீட்டுமொரு. (களசங)

வர்க்கொருவர்தன்கழுத்தைவாவிப்பிடித்தினைய
சொற்கள்பலபன்னித்துடித்தழுவார் தற்குணத்தால். (களசச)

முன்னாலேகெட்டவர்கள்மூவரென்றுசொல்வர்கள்நாம்
தன்னாலேகெட்டோஞ்சனைதக்கொழுப்பால் நன்மனையாள் (களசரு)

போகாதேபோகாதேபொல்லாதஜட்சியென்று
சாகுருவிபோலுங்கடுத்தாளே ஆகெடுவான். (களசசு)

மல்லாரிபெற்றமகன்மாய்த்துக்குள்ளாகி
யெல்லாநலமுமிழந்தோமே செல்லமகன். (களசஎ)

நம்பிதுரைச்சாமிதன்மேற்சாமிவந்துதாம்பயலை
மெய்ம்புறக்கோபித்துமுறுகினதாம் பின்புமுனைக். (களசஅ)

கேஜெயமுண்டாக்குவனென்றேறம்கவலக்கைகொடுத்துப்
பூஜையப்பாற்போடென்றும்போயினதாம் தோசியவன். (களசகூ)

எத்தனையோதந்திரமாயேமாத்திரம்மிருவர்
புத்திமயக்கமுறப்போதித்தே யெத்திமெல்லக். (களருO)

கொண்டுவந்துமாட்டிக்குடியைக்கெடுத்துநம்மைத்
தெண்டனைக்காளாகவிட்டான்சிற்றப்பா பண்டைநல. (களருக)

மெண்ணுமடையனுணக்கேதேனுந்தந்தானோ
கண்ணானகானறியேன்காலக்காசு மண்ணுவான். (களருஉ)

வாயாலேயேய்த்துவகைமடிப்புச்செய்துவெறி
நாயாயலேந்துலியவிட்டான் லுயாமல். (களருங)

நாடியிவன்சொல்மொழியைநம்பாதேநம்புவதிற்
கேடுவருமென்றேனீகேட்டிலையே நீடுமக்கோர். (களருச)

தாழ்வுவரிலாஸ்திமுற்றுஞ்சாதிப்பேனென்றுரைத்த
பாழுறுவானெங்கோபறந்துவிட்டான் வாழ்வுகந்து. (களருரு)

பே.லில்வெயிற்பட்டறியோம்வேலையொன்றுஞ்செய்தறியோம்
ஏல்லைநலத்தோடிருந்தோமென்செய்வோம் காவில்விலங் ()

கிட்டெடாருவன்வன்ஜெயிலிலேவுபலகஷ்டமுற்றும்
பட்டுவந்தோன்சொன்னான்படிப்படியாய்க் கட்டைவெட்டச் ()

சொல்வாராஞ்சாடிமூக்கச்சொல்வாராஞ்செக்கிழுக்கச்
சொல்வாராமண்சுமக்கச்சொல்வாராம் பல்வேலை. (களருஅ)

செய்துமுடித்துஞ்சிறிதுசெய்யமுடியாதுவிடில்
வைதுவெய்யிற்போட்டுவதக்குவராம் ஐயையோ. (களருகூ)

காலாலுதைப்பாராங்கையாலிடிப்பாராம்
கோலால்நற்பூசைகொடுப்பாராம் ஓலிடவெம். (களசுo)

காவல்வசப்பட்டுக்கழிவதினுமச்செயிலின்
சேவகர்நிர்ப்பந்தமோசெப்பரிதாம் தாவன்னம். (களசுக)

கிஞ்சித்துங்கிட்டாதாங்கேப்பைச்சுடுகளியாம்
பஞ்சொத்தகாற்கிரட்டைப்பாடகமாம் அஞ்சுற்ற. (களசுஉ)

இன்னவிதமாஞ்ஜெயிலேழ்வருடமுந்தரித்துத்
தென்னவிதமாகவுமீடேறுவோம் அன்னமய. (களசுங)

பூணிழந்துபேணுமுடைவிழந்துநெஞ்சநிறை
பேணிழந்துகீர்த்தியிழந்தாலும் நாணிழந்து. (களசுச)

தன்னீர்க்கலசமொன்றுதாங்கியுயிர்கொண்டுலவல்
நன்னீர்மைத்[illegible]ரோநடைப்பிணமே முன்னேறற்ற. (களசுரு)

தென்னபவஞ்செய்தனமோயேழ்வருடமுந்தொலைந்த
பின்னலவோபெண்சாதிபிள்ளைமுகந் தன்னைநாம். (களசுசு)

காணுவமோவல்லகடவுள்செயலெப்படியோ
நீணிலத்திலாயுளென்னநிச்சயமா வீணன்முழுப். (களசுஎ)

பாவியினுஞ்சண்டாளப்பாவிநமக்கெங்கிருந்தான்
தாவியட்டமத்துச்சனிபோலே தேவியுடன். (களசுஅ)

பக்கஞானின்றேங்கிமயக்குவரோநம்பனைகவர்
கெக்கலிகோட்டிப்புரிவர்கேளிக்கை யக்கோவென் (களசுசு)
றையநெடுஞ்சிங்கையராயாண்டுவிலங்கிட்டவர்கள்
தெய்வமனைத்தொநாந்துசெயலழிந்தார் பொய்யனெனும். (களஎ0)

## பிரதிவாதிகளர்க்குச்சென்றுசொத்துகளை மறைத்தல்.

ஆப்பிரதிவாதியயர்ந்துநான்தெண்டனைக்குத்
தப்பினதேமுன்னோர்கள்தர்மமென்றும் வெப்புறவே. (களஎக)
சாறிவரும்போதுகண்டோர்தான்வினவுங்காலையிவன்
பாறுறவோர்போக்காய்வழுத்துவான் தேறவக்கீல். (களஎஉ)
சாக்ஷிகளுக்கெவ்வளவோசாதனையைப்பற்பலகால்
கூச்சமறசொல்லிக்கொடுத்திருந்தும் பேச்சைமறந் (களஎங)
தீரங்கிக்காலத்திலெக்கசக்கமாயுளறிப்
பாரெங்குந்தூற்றப் பழியடைந்தார் பேர்மங்கிக். (களஎச)
கொட்டாரெனையுங்கொடுத்தார்கடுஞ்சூழலிற்
பட்டாழ்கலம்போற் பயனிழந்தேன் கெட்டியாய். (களஎரு)
ஆனைவால்பற்றினவராறுகடந்துய்வர்சிறு
பூனைவால்பற்றினவர்போலானேன் ஆனாலும். (களஎசு)
கோரட்டார்செய்தகொடுமைகொடுமைதிரி
யூரட்டார்செய்கைவலியூழென்றுங் கோரட்டார். (களஎஎ)
மீதிலதிகோபமாய்வேகமுடனூர்புகுந்து
மூதியதன்சொத்துமுழுவதையும் பேதமிலா. (களஎஅ)
மற்றவிடத்தேபதுக்கிவாதியினிமேலிதனைப்
பற்றிமுடிந்தமட்டும்பார்க்கட்டும் சற்றும். (களஎகூ)
இவலைவிடமாட்டேன்திரிந்துபடிகட்டிக்
கவலையும்றுவிழ்வான்கயவன் அவலமுற்ற. (களஅ0)
மப்பினிலோர்வேலையந்தவாரண்டிற்சிக்கிவிட்டாற்
றப்பிவெளியேறுதற்குத்தந்திரமுன் டிப்படிவாய்ச் (களஅக)

சட்டதிட்டங்காட்டிச்சமர்த்தாகப்பேசினும்வெண்
சட்டைகண்டாற்கால்கள்தரியாதே கஷ்டமுற்ற. (களஅஉ)

## வாதியின்சங்கதி.

வாதிகளிகூர்ந்துவலியஜெயம்பெற்றோமென்
றோதரியவேமாப்புடையனாய் ஆதியெனும். (களஅஙு)

மீனாக்ஷிசுந்தரற்குமிக்கவபிஷேகமுதற்
றானாக்ஷியாகச்சமர்ப்பித்தே யானல்நான். (களஅச)

நன்மையேசெய்திருக்கநாடுமெதிர்வாதியெனைத்
தின்மையுறப்பேசிமெத்தச்சீறினான் அன்னவனை. (களஅரு)

ஊரார்சிரிக்கவொருநாளைக்காணலும்
பாராச்செயிலில்வைத்துப்பார்ப்பேனான் பாருமென. (களஅசு)

## வாதிவாரண்டெழுப்பல்.

நட்டணைகள்பேசிநயந்துபிடிவாரண்டுக்
கட்டளைக்காகப்படியுங்கட்டியே சட்டெனவே (களஅஎ)

வாரண்டுச்சேவகனைவல்லையுறக்கூட்டிவந்தே
யூரண்டிவைத்தங்குசாவியே நேரலனோர். (களஅஅ)

தாவளத்திற்பந்தகமாய்த்தங்குதல்துப்பாலுமறிந்
தாவலித்துக்கண்டுபிடித்தக்கணமே சேவகன்பாற். (களஅகூ)

காட்டியவனேகவிவன்காலயெமபாசமெனத்
தீட்டியவாரண்டைச்செலுத்தவே யாட்டமுற்று. (களகூ0)

## வாரண்டிலகப்பட்டபிரதிவாதி சேவகனை உறவுகொண்டாட்டல்.

வந்தீரோ அண்ணாவளர்குழந்தைகுட்டிகளுஞ்
சிந்தனையில்லாதெவருஞ்க்ஷேமமா முந்திநா. (களகூக)

ளண்டியகோர்ட்டிலனேகந்தடவையும்மைக்
கண்டிருப்பேன்பேசிக்கலந்திலேன் பண்டுங்கள். (களகூஉ)

கீர்த்திகேட்கொள்ளவுங்கேட்டிருப்பேன்தங்களைநான்
பார்த்துவரவென்றூற்பலசோலி யார்த்த. (களகூஙு)

சிரஸ்தேதார்மற்றுமுள்ளசேவகருத்தியோகர்
பரிகைஷயுண்டெல்லாரும்பழக்கஞ் சிரஸ்ததார். (கஎகூச)

என்பாற்பிரியமவரோதோவிசேடமென
வன்பாற்கடிதமனுப்பினார் நன்பாலா. (கஎகூரு)

நெய்தயிர்பால்காய்கறிகனோர்ந்தபழவர்க்கமிரும்
பைதவழ்தேனின்னம்பலசாமா னெய்துமதைச். (கஎகூசு)

சேகரித்துநாளேகின்றுசெல்லாயக்கிழமையங்கு
மோகரித்துநான்வருவேன்முந்திநீ யேகுவையென். (கஎகூஎ)

றுதரவுஞ்செய்தங்கனுப்பினேனீருமந்தக்
காதர்கான்றன்னையெதிர்கண்டிருப்பீ ரீதுநிற்கத். (கஎகூஅ)

தூண்டுமிந்தவாதிக்கோர்துட்டளவில்யான்கொடுக்க
வேண்டியதேயில்லைவெகுமோசம் மூண்டடவெனக் (கஎகூகூ)

காகாவிரோதிகளுமக்ரமவாதிப்பயலும்
வாகாகச்சேர்ந்துமறைவுதலா யூகித்துக். (கஅ00)

கற்பனையதாயோர்கடன்பத்திரமமைத்துச்
சற்பனைவிரோதிகளேசாக்ஷிபாய்ச் சொற்பயிற்றி. (கஅ0க)

மட்டிவழக்கிட்டானம்மறுபடியிக்குங்கேள்விகட்குத்
தட்டியெதிர்சொல்லத்தரமுண்டோ சட்டமுள்ளா. (கஅ0உ)

கோரட்டில்நேரேகுறித்திடும்விசாரணையிற்
சீரிட்டென்பக்ஷஞ்செயமிருக்கப் பாரிஷ்ட (கஅ0௩)

ரோதிபங்கியாயமுணராதஜட்சியசல்
வாதிபக்ஷந்தீர்ப்பைவழுத்தினா னீதைநா. (கஅ0ச)

னப்பீலில்மாற்றயடிப்பேனதாற்பெரிய
தப்பிதமனேகருக்குஞ்சள்ளையுண்டென் றப்புறமும். (கஅ0ரு)

நன்றிசெய்தலாலேநமக்கோர்குறைவும்வரா
தென்றெண்ணிப்பேசாதிருந்துவிட்டேன் பொன்றுகையை. ()

யாயிரத்தோடின்னமுமையாயிரமானாலுமற்றப்
பேயரைப்போற்சற்றுமனம்பேதியேன் ஞாயமின்றித். (கஅ0எ)

தொந்தமுள்ளதீர்ப்புத்தொகையைச்செலவுடனே
சந்தேகநீங்கச்சரிக்கட்டி முந்தாநாட். (கஅ0அ)

செம்மடையன்றன்பாற்செலுத்திவரும்படியாய்
நம்முடையகாரியஸ்தர்நாகுவையர் தம்மிடையே. (௧௮0௯)

வையுரக்கமாகக்கடுகியஜவாரியுடன்
வையுரக்கட்டிப்பணமனுப்ப வையரந்த. (௧௮௧0)

வாதிபாற்சென்றுமக்குவாஸ்தவமாயுள்ளதுகைக்
கேதுமறுபேச்சுக்கிடமில்லை யீதுடன்கோ (௧௮௧௧)

ரட்டுச்செலவிலவைவாசியல்லதும
இஷ்டப்போற்றள்ளியிலாக்கமாய்க் கட்டுமிதை. (௧௮௧௨)

வாங்குவீரென்றுவெருவாய்நயந்துசொன்னரா
மாங்கவனெப்பாதாலடமீறி யீங்கு. (௧௮௧௩)

மறுபடியுங்கொண்டுவந்தார்வந்ததுகைனயக்
கறுவிமுகர்ப்போட்டுறுக்கிக்கட்டி யுறுதியுடன். (௧௮௧௪)

கோரட்டிஸ்நாலோக்குசாலாத்தொகைசெலுத்திச
சீரிட்டுவாரநென்றுசிந்தித்துச் சாரட்டு. (௧௮௧௫)

வண்டியுந்தயாரப்படுத்தினைந்திருக்குங்காலையுமைக்
கண்டேனிதயக்கனிதார்த்தேசு பண்டெரி. (௧௮௧௬)

மாதவத்தாயுமைவரப்பெற்றேனுயிருவர்
பேதமில்லேனீரென்றிறவியே பூதலத்தில் (௧௮௧௭)

நல்லார்சிநேகமதைநாடுவோனென்றிலை
நில்லாப்பொருள்தானிலேவரமோ நல்லோரோ. (௧௮௧௮)

## வாரண்டுச்சேவகனைபிரதிவாதி வீட்டுக்கழைத்து

## வருதல்.

வாசனைசேரென்மனையில்வந்திருக்குங்கோர்வேளை
போஜனஞ்செய்தப்பாய்புறப்படுவோம் யோசனையேன். (௧௮௧௯)

வாருமண்ணுவென்றுபலவார்த்தைகளைப்பேசவிந்தக்
கூருகெட்டவேணவாய்க்கூதறையன் நேருடனே. (௧௮௨0)

மெய்ப்படுசொல்லென்றாநம்பிவேகமுடனெழுந்தான்
கைப்படுசந்தோஷங்கவடுகொண்டே பொய்ப்புளுகன். (௧௮௨௧)

## மனைவியிடத்திற்சொல்லுதல்.

நண்ணுமனையினிற்போய்நாயகியைக்கூவியென்ற
னண்ணாத்தைவந்தாரறியாயா நண்ணு. (கஅஉஉ)

யிருந்தடிபாவாயிவர்நமக்குமெத்தப்
பரிந்திடுசிநேகசம்பந்தம் வருந்திநீ. (கஅஉங)

யாரென்றிராதேயிவருனக்குமச்சானும்
பூருவத்திற்செய்திருந்தபுண்ணியமே யோருருவாய். (கஅஉச)

வந்தாரிவற்குவரிசையுபசாரமிட்டு
விந்தையுடன்பேசாவிருந்திடுவோஞ் சந்ததமும். (கஅஉரு)

நம்மனையிலேபசுக்கள்நாலுழியோகறக்கும்
அம்மனைத்தானல்விருந்துக்கஞ்சுவனோ கம்மலிலே. (கஅஉசு)

நித்தியமுந்தப்பாமனீகடைந்தவெண்ணெய்தனைப்
புத்துருக்குநெய்போற்புனிதமாய் வைத்துமலர்த். (கஅஉஎ)

தாதுலவுஞ்சாடிகளிற்றானிருக்குமேயதனைப்
பூதிச்செலவுபண்ணிப்போடாதே போதுமென்ற. (கஅஉஅ)

## பலகாரவர்க்கம் கூறுதல்.

பச்சரிசிமுக்குறுணிபற்றாதுபற்றலையேபண்
றச்சமயமுக்காலமுகாதே பச்சரிசி. (கஅஉகூ)

யின்னம்பதக்கிட்டாலேராளம்நீயென்ன
சின்னஞ்சிறிசோதெரியாதா பின்னுங்கேள் (கஅங0)

பச்சைக்கடலைபசும்பயறுகோதும்பை
மொச்சையுளுந்துமுளைத்துவரை யிச்சையொடு. (கஅஙக)

பந்திநிறைசாரப்பருப்புவாதாம்பருப்பு
வந்தனவிதெல்லாம்வகைவகையா யந்திரத்தில். (கஅஙஉ)

மாவரைத்துத்தெள்ளிமதுரம்புகட்டியதை
நீவளமாய்ச்சேர்ப்பாய்நிமிடத்தில் காவினிய. (கஅஙங)

சீனிச்சருக்கரையுந்தேனுங்குடங்குடமாய்ப்
நானிச்சணமழைத்துநல்குவேன் மானேதண். (கஅஙச)

பூமலிவெண்பூந்திபொலிவுறுசிலேப்பிலட்டு
மாமதுரமிக்கமதுர்பேணி சோமாசா. (௧௮௩௫)

பாதுமல்வாகெய்யுருண்டையாலடைரவாலாடு
தாதுவிர்த்திசெய்திடுகுஞ்சாலாடு மோதுநொக்கல். (௧௮௩௬)

பால்கோவாசேவுபணியாரந்தோசைமன
மால்மேவுபோளிவடைசுகியம் நால்விதமாம். (௧௮௩௭)

அப்பளந்தேம்பாகோடதிரசஞ்சீராபருப்பி
முப்பழஞ்சேரல்வாமுதலாக விப்புவியி. (௧௮௩௮)

லென்னபலகாரமுண்டோயாவுமன்கைப்பக்குவத்தால்
நன்னயமாய்முந்திடக்கட்டும் மன்னுசுவை. (௧௮௩௯)

## விருந்துவளப்பம் கூறுதல்

காட்டுவிருந்தினுக்குக்காய்கறிசாமான்கள்பல
தேட்டமறக்கொண்டுவந்துசேர்க்கிறேன் நீட்டுசிறு. (௧௮௪௦)

சன்னச்சம்பாவரிசிச்சாதத்தைப்போதமுல்லை
மன்னுமலர்போலாய்மலர்த்தியே யின்சுவையிற் (௧௮௪௧)

கூட்டுக்கறிகள்குழைகறிகள்செய்த்துவட்டல்
பாட்டிலைசேர்பச்சடிபொற்பாளிதங்கள் வேட்டருந்து. (௧௮௪௨)

மோர்க்குழம்பைச்சற்றுமுதிரவிடாமலுந்தீம்
பாற்குழம்பைமெத்தப்பசுந்துசெய்வா யேற்கும். (௧௮௪௩)

பருப்பிரசமுன்கையினுற்பக்குவமாணமேலா
கருப்பிரசம்போலினிக்குங்கண்டாய் விருப்புபெருங். (௧௮௪௪)

காயமதைக்கொஞ்சங்கனமாகச்சேர்த்திடுவை
வாயுவைக்கண்டிக்குமலங்கர்த்தும் ஆய. (௧௮௪௫)

கறிவகையில்மிச்சங்கடுகையிடாயத்தா
விறுகுமலங்காய்கையெழுமே நறியசெழும். (௧௮௪௬)

பாயசத்துக்காகப்பழுதறவோதும்பைரவ்வை
யாயதிற்றீம்பாலேயளந்தவிட்டுத் தூயபன்னீர். (௧௮௪௭)

சுக்குச்சாதிக்காய்துடிசே[illegible]னே
[illegible]க்கரசம்வாதாம்பருப்பு[illegible] மொக்கலஞ்ஞ். (௧௮௪௮)

சேருங்கற்கண்டொடுநற்சீனியுமொன்றாய்க்கலந்து
சாரந்தெளிவுபடத்தாளித்து மாரஞ். (௧௮௪௯)

சிதமுறவும்பக்குவமாய்ச்செய்தாலண்ணாவுக்
கதுபிரியமாயிருக்குமன்றோ புதுமலரிற். (௧௮௫0)

றேமதுரம்போலுந்திரட்டுப்பால்பண்ணுவதை
நீமறந்திடாதேதினையில்லைப்பா யாமிதிற்றப். (௧௮௫௧)

## விருந்து வளப்பம்

பாதுபலகாரவர்க்கம்யாதிசெலவாகமற்றப்
பாதியைச்சூதானப்படுத்துவாய் ஓதுமிவர். (௧௮௫௨)

கூடவேசென்றந்தக்கோர்ட்டிற்றுகைசெலுத்தி
மாடிதிகழண்ணாமனைபுகுந்து நாடியண்ண. (௧௮௫௩)

தேவியார்மற்றும்வளர்செல்வரையும்பார்த்தவர்க்கு
நாவினியபட்சணமுநல்கியே மாவிலையி. (௧௮௫௪)

லண்ணியர்க்கோர்பட்டுமருமைக்குழந்தைகட்கு
வண்ணச்சிற்றாடைவழங்குவே னண்ணாவுக். (௧௮௫௫)

கூதாப்பெரியசரிகையுருமால்கொடுப்பே
னீதெனக்கோர்லெட்சயந்தானில்லையே மீதி. (௧௮௫௬)

யிறுப்புத்தொகையிவர்க்கியன்றமட்டுங்
குறிப்பறிந்துபின்னுங்கொடுப்பேன் மறுத்துநீ. (௧௮௫௭)

வேண்டாமென்றோதிவெகுவாய்த்தடுத்தாலும்
நீண்டகைகொடாதினிமேனிற்குமோ வீண்டுலகி. (௧௮௫௮)

லிவ்வயதுக்குள்ளாய்நானெவ்வளவோதேடியபொன்
னவ்வளவுமேவிறையமாக்கினேன் மெய்வருந்து. (௧௮௫௯)

தீனர்களுக்கியாமற்றேடும்பொருளவர்பின்
போனதுவுண்டோபுகலுங்காற் றனகுணம். (௧௮௬0)

மன்னியதோர்மூவேழுவள்ளலெனக்கீர்த்திபெற்றா
ரன்னவர்களீகையினாலல்லவோ வென்னண்ணா. (௧௮௬௧)

வெந்தாகமீறவந்தோவெய்யிலிடைநடந்து
வந்தார்பசிபொறுக்கமாட்டிலா ரந்தோகா. (௧௮௬௨)

யற்றத்தரித்திரமென்னைப்பளத்தைவாட்டியிங்கு
வற்றலேனென்றுய்வதக்கியே பற்றித். (க௮௬௩)

தொழவுரியமாற்றுத்துவையலிட்டோர்குத்துப்
பழையதுவைப்பாய்முன்பசிக்குக் குழைவுறவே. (க௮௬௪)

வாய்க்குருசியாய்வளமாய்க்கறிவகையுஞ்
சீக்கிரமாகட்டுஞ்செழுஞ்சமைய லாக்கர்கடை. (க௮௬௫)

மாடுலவுஷாட்பிற்சாமான்கொஞ்சம்வேண்டுமதை
யோடியிதோவாங்கியொருமினிட்டில் நாடிமிக. (க௮௬௬)

## பிரிதிவாதிவாரண்டுசேவகனுக்குத்

## தப்பியோடுதல்.

வாரேன்வாரேனெனவும்வாரண்டுச்சேவகனைக்
காரியம்போலேத்திக்கடும்புளுகன் பாரி. (க௮௬௭)

யளப்பிதுவேயாமென்றதுபோக்காயோடி
யொளித்திடவச்சேவகனுமுள்ளங் களித்து. (க௮௬௮)

வருவான்வருவானென்றெண்ணிவழிபார்த்து
மொருநாளுங்காணுனுணங்கி மருவிநம்மை. (க௮௬௯)

## சேவகன்மனம்வருந்தல்.

மோசமேசெய்ததிவேலூர்மோசமிலேயேமிகப்பே
ராசையெனக்கூட்டியலலைத்தித் தோசியிவ. (க௮௭௦)

னெத்தனைபோவார்த்தைப்பிதமாயுரைத்தமொழி
யத்தனையுமெய்யென்றேமாணிருந்தே னித்தராமாய். (க௮௭௧)

வஞ்சிப்பானென்றுகிஞ்சமாத்ரமறிந்தாலிவனை
மிஞ்சிப்பறக்கவிடுவேனோ கொஞ்சியுல. (க௮௭௨)

கேத்துகொடையாளியைப்போலென்னென்னமோபயல்தான்
பூத்தானங்காட்டிப்புளுகினனே தூத்தேறி. (க௮௭௩)

நல்லவிருந்தாம்வீட்டில்நாளுழிப்பாலுளதாம்
அல்லவுமெய்ச்சாடியுளவிலையாம் வெல்லமிட்ட. (க௮௭௪)

கூட்டுக்கறியாங்குழைகறியாம்வக்காளைப்
பேட்டுக்கிடந்தபுளிக்கறியா மூட்டுகின்ற (௧௮௭௫)

பச்சடியாம்நெய்யாம்பருப்பாமதிரசமாங்
கிச்சடியாம்வைச்சடிச்சுக்கிண்ணுவனும் பட்சணமாம் (௧௮௭௬)

நற்றிரட்டுப்பாலாமென்னுயகிக்குப்பட்டுடையா
முற்றுவெணக்கோருருமாலாஞ் சொற்றகொடைக். (௧௮௭௭)

கன்னுவதாரக்கடும்புலியாய்யாவர்தடை
சொன்னாலும்வாரிச்சொரிவானும் இன்னபல (௧௮௭௮)

வார்த்தைகளாலேமாந்திமாயமாய்த்தப்பியசங்
காத்திமகன்போனவழிகாணேனே யாத்தாடி. (௧௮௭௯)

பாடெடுத்தகள்ளனுக்கிங்காக்கியிட்டகள்ளியிவட்
கீடொருவருண்டோவென்றிவ்விதமாய் வாடியவ. (௧௮௮௦)

ளுங்காங்குபார்ப்பானயர்ந்துமனங்குழைவா
னேங்காமலேங்கியெழுந்திருப்பா னீங்கிவனும் (௧௮௮௧)

ஆஜரில்லையென்றுசொல்லியத்காட்சிவாங்கவென்று
லோசரியாய்வாதியவனைப்பானே நீசகன்செய் (௧௮௮௨)

மோசமதையுள்ளபடிமுற்றுமொழிந்தாலுமந்த
நாஸரேந்தன்சொல்மொழியைநம்பானே பேசியநா. (௧௮௮௩)

ளோரெட்டிம்சேவகன்பாலொப்பித்தேனென்றுசொல்லிக்
கோரட்டில்வாதிமனுக்கோருவனே நேரிட்ட. (௧௮௮௪)

குற்றமதைக்கண்டுணர்ந்துகோரட்டார்சேவகத்தைப்
பற்றறவுநீக்கிவிடப்பார்ப்பாரே நற்றயவா. (௧௮௮௫)

யாதியிலென்பாட்டனதன்பேரிலென்தகப்பன்
பாதுகொண்டயானும்பரம்பரையாய் மேதையுடன். (௧௮௮௬)

சாலவெண்பத்தேழ்வருடச்சார்வீசேயாகுமிந்த
வேலையிழந்துவிடுவேனோ தோலாண்டி (௧௮௮௭)

வேடம்பூண்டாலும்வெய்யனைநான்கண்டுபிடித்
தேடைரிபோட்டவனைத்தெண்டிக்கக் கோடறிய (௧௮௮௮)

நாடிவருவேனெனவுநாளுமிவன்போற்சிலருந்
தேடியலைந்தோடித்தியங்கிளரால் நீடுகேடம் (௧௮௮௯)

பேரண்டந்தன்னில்வெகுபேர் கள்பயங்கொண்டுயொல்லா
வாரண்டெவ்வேளோவருமோவென் நீரற். (கஅசூ0)

கருகியதுவேஙினைவாய்க்கண்கலங்கிநாளு
மருவுகின்றபோழ்துவழிமே லொருவனங்கு. (கஅசூக)

தாவுசட்டைபூண்டவனும்தன்போக்காய்ப்பாதைவரச்
சேவகனேவென்றுதிகிற்பிடித்து நாவிதனும். (கஅசூஉ)

பாதித்தலைசிரைத்தும்பாதிசிரையாதிருக்கும்
போதுபறிபட்டுப்புளக்கடையாய் மோதுபெரும். (கஅசூந.)

காடுகளிலேபதுங்குதுங்காணமலைப்புடம்பும்
தேடியொளிவார்சிலபேர்கள் நீடுலகி. (கஅசூச)

## மற்றும்பிரதிவாதிகள்வாதியைக்கண்டு கேலிபண்ணுதல்.

லார்ப்பரித்துநாளுமரசுபுரிகோரட்டார்
தீர்ப்புரைத்தபின்னுஞ்செலுத்தாமல் சூர்ப்புறத்தன். (கஅசூரு)

மாவளஞ்சேராஸ்தியெல்லாமற்றவர்க்குவிற்றுவிட்ட
பாவனைபோற்பத்திரமும்பத்திபண்ணிக் கூவிக். (கஅசூசா)

கருதுமசல்வாதிதனைக்கண்டவுடனேங்கிச்
செருமிகின்றுமீசைதிருத்தி மருவுஜெயிற். (கஅசூஎ)

கெல்லாரைப்போலுமினியபடிகட்டவிதி
யில்லாப்பயற்கேனிறுமாப்புந் தொல்லைமுடை. (கஅசூஅ)

நாறுஞ்செயில்தனையுநானறிவேனென்றுசொல்லிச்
சிறித்திரிவார்சிலபேர்கள் மீறுகின்ற. (கஅசூகூ)

## முதலாளிகள் ஒப்பந்தம்செய்தல்.

வாணிபர்கள்கைப்பணத்தைவட்டிக்காயிச்சைகொண்டு
நாணயமிலாதவர்க்குகல்கியே வீணிற். (ககூ00)

நெருத்தெருக்கடோறுந்திரிந்தலைந்துசிந்தை
வருத்தமிகக்கொண்டுமறுகால் ஒருத்தருக்குஞ் (ககூ0க)

செப்புக்காசேனுஞ்செலவிடல்கூடாதெனவே
யொப்பந்தம்பேசியொழித்துவிட்டா ரிப்பரிசால். (ககூ0உ)

வாணிபவிற்போன்றநுதல்மானேவெறுங்கைமுழந்
தாணிடுவதுண்டோநீசாற்றுவா யானாலும். (ககoங)

நன்கார்ந்தபண்டிகையைநாமுஞ்செய்வாமெனச்சீ
வன்போலும்பூண்டிருந்தமங்கலத்தை முன்போலும். (கக0ச)

கொண்டோடிவிற்றுக்குலாவிபதீபாவளியை
யுண்டாடல்காட்டியொழித்தனரே மண்டலத்தோர். (கக0ரு)

இவ்விதமாய்ப்பஞ்சத்திடர்மருவுகாலையினிற்
றெய்வபலத்காலுமிதைத்தீர்ப்பமெனச் செவ்வியல்சேர். (கக0சா)

## மஹாநாட்டார்பஞ்சநிவர்த்திசெய்யச்

## சங்கங்கூடுதல்.

நானுகுலத்துதித்தநாட்டுத்தலைவர்களும்
மானாபிமானமுள்ளமாந்தர்களும் ஞானவளம். (கக0எ)

பொங்குமதுரைப்புதுமண்டபத்தில்மகா
சங்கமெனச்சேர்ந்துசபைகூடி யிங்குநாம். (கக0அ)

ஆண்டவனிலாதவடிமையோநம்மைவழி
பூண்டகுலதெய்வமென்னபொய்த்ததோ யீண்டியநம். (கக0௯)

கைக்குள்வெண்ணெய்க்கட்டிகனமாகவைத்திருந்தும்
நெய்க்கலைவார்போலுநினைவயர்ந்தோம் பொய்க்கலியாற் (ககக0)

சங்கரனுமய்யமெடுத்துண்டான்றடங்கடலின்
மங்கையுடன்காமுறைந்தான்மாலென்றுஞ் சங்கமதில். (கககக)

அவ்வைசொன்னநீதியறியோமோநாமினிமேற்
றெய்வசன்னிதானமதிற்செப்புவோம் பவ்வமெழுஞ். (கககஉ)

சூரியனைக்கண்டபனிதோன்றாதகல்வனபோற்
பாரில்வினையெல்லாம்பறந்துவிடும் வாருமென்று. (கககங)

## சோமசுந்தரக்கடவுள் சன்னிதானத்தில்

## நாட்டார்கள்முறையீடு.

பற்றுயத்தொடரும்பவந்தொலைத்துமுத்திதரும்
பொற்றாமரையின்புனலாடி முற்றுரிய. (கககச

சத்திசிவமாகிநிறைதற்போதசிற்பரமாஞ்
சித்திவிக்கினேஸ்வரனைத்தெண்டனிட்டு மொய்த்துலவு. (௧௬௧௫)

கங்கெழுகதம்பகவனந்திகழ்மதங்கியுமை
பங்கயமணங்கமழ்பதந்தொழுது பங்கமர். (௧௬௧௬)

சதாசிவசுதாகரசடாதரசபாநட
னிதாகிதமிலாதவனிராசத னதீதிய, (௧௬௧௭)

னிராகரனிராமயனிராகிர்தனிராகுல
சராசரபராபரதயாபர னராவணிகொள். (௧௬௧௮)

வேதாந்தவேதியனைவேதனுமால்காணரிய
நாதாந்தமோனநவமணியை ஆதார. (௧௬௧௯)

மேவுகருணாலயனைவீரியப்ரபாகரனை
மூவுலகுந்தானாமுதற்பொருளைத் தேவாதி. (௧௬௨0)

தேவசகாயகனைத்தேசோன்மயப்பொருளைப்
பாவனைக்குமெட்டாப்பரஞ்சுடரை யாவிதொறு (௧௬௨௧)

மெள்ளுக்குளெண்ணெய்போலெங்குநிறைகின்றவனை
யுள்ளுக்குமுள்ளாயுறைபவனைத் துள்ளிவரு. (௧௬௨௨)

தந்தியதள்பூண்டவனைச்சச்சிதானந்தனைப்பொன்
னந்திவண்ணம்போலொளிருமற்புதனை சுந்தரற்குத். (௧௬௨௩)

தூதுசென்றமாமுதலைச்சூலாயுதக்கரனை
யாதிசருவேச்சுரவனுமயனைச் சோதிதவழ். (௧௬௨௪)

பங்கயக்கண்ணற்குப்பருதிவட்டந்தந்தானை
அங்கயற்கண்பாகமமர்ந்தானை யெங்கள்சிவ. (௧௬௨௫)

சொக்கேசரென்னுஞ்சுடர்தனைக்கண்டானந்த
நெக்குருகிநெக்குருகிநெக்குருகி யக்கணமே. (௧௬௨௬)

நாட்டாரனைவர்களும்நாடியகண்ணீரரும்பச்
சாஷ்டாங்கதண்டன்சமர்ப்பித்தே நாட்டமுடன். (௧௬௨௭)

வானாதிபூதமுதல்மற்றும்பொருளெவையுந்
தானாய்நிறைந்ததயாபரனே மோனஒளி. (௧௬௨௮)

லம்புயனுமாலுமுடன்றாற்றுமிகல்மாற்றுதற்குத்
தம்பவழலாகிநின்றதாணுவே நட்புபஞ்ச. (ககூஉகூ)

வன்படையாலன்றிறந்தமாயவராகக்குருளைக்
கன்படைந்துபாலருந்துமப்பனே மின்சால். (ககூ௩0)

உலகந்தனைப்படைத்தீரோதரியரிவர்
பலவுமினிதாகப்படைத்தீர் உலவுமதற் (ககூ௩க)

காதரமாய்மண்ணூறும்விண்ணுமாதாரமாக்கிமலை
வேதமுறுசெல்வுயிரும்ரெக்ஷித்தீர் ரோதுமின்னாள். (ககூ௩உ)

அவ்விரண்டையுஞ்சுருக்கிலந்தோவான்மாக்களினி
யெவ்விதமுய்தற்கியலுமென்செய்வோர் செப்பீவ. (ககூ௩௩)

பருவகாலத்தில்மழைபார்மீதுபெய்யா
தரியவிளைவில்லாதருப் பரவுயிரும். (ககூ௩ச)

வாடுவதுநாயமதோமாமழையிறை பொருளோ
தேடக்கிடையாச்செழுங்குன்றே நீடுகடைய. (ககூ௩ரு)

கண்பார்த்தடியார்கலக்கந்தவிருமென்று
பண்பாய்த்துதிகள்பலபகர்ந்து நண்பொடேதிர். (ககூ௩கா)

நின்றுநெடுநேரநிகழ்த்துமொழி கேட்டைய்யன்
கன்றுகண்டவாப்போற்கனிந்திரங்கி பொன்றுக்கும். (ககூ௩எ)

## சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்தல்.

அஞ்சாதிருங்கடமையாதரிப்போநீவிரினிக்
கொஞ்சமேனுங்கவலைகொள்ளாதீர் பஞ்சமிங்கு. (ககூ௩அ)

நேர்ந்தவிதமெம்மைநினையாதிகழ்ந்ததினும்
காந்திவிளையாடல்சற்றேகாண்பித்தோ மாய்ந்திடுங்கா. (ககூ௩கூ)

லுள்ளத்துக்குற்றமொருகோடியானாலும்
பிள்ளைக்குந்தாய்க்கும்பிணக்குண்டோ வள்ளலென்று. (ககூச0)

நம்மிடம்வந்தன்பானயந்துமொழிந்தீர்களுங்க
டம்மனப்போலேசகலசம்பத்தும் ரம்மியமுடன். (ககூசக)

நீங்கள்பெற்றுப்பூவுலகினீடுழிவாழ்ந்திருக்கப்
பாங்காயுமக்குவரம்பாலித்தோ மோங்குலகில். (ககூசஉ)

சோமசுந்தரக்கடவுள் தமதுசரித்திரங்கூறுதல்.

தன்பாடுமுற்றுமென்பாற்சாற்றினீருங்களிட
மென்பாடுஞ்சற்றேயியம்புவே னன்கார்ந்து. (கசுஙஎ)

வாழ்வுயர்பொன்வெள்ளிமலையாயிருந்தெனக்குந்
தாழ்குடிலப்பஞ்சந்தலைப்பாரஞ் சூழுமுனி. (கசுருஅ)

வோர்கள்பன்னியார்நகைக்கவுன்மண்டையோடேந்திப்
பாரிலையமேற்றதுவும்பண்டறிவீர் ௦ பார்வைக்கு (கசுருகூ)

ராருமதியாதவனு * யங்கமெடுத்தேன்பவத்தை
யீருமடியாருக்கெளியனுன் யாருமற்றுன். (கசுசு௦)

அன்னைபிதாவில்லாவனுதியிவனென்னுமொழி
கன்னமுறவஞ்சிறெடுங்காடுற்றேன் பின்னுமோர். (கசுசுக)

கர்பத்தில்ரெண்டானைகட்டியதனுலடைந்த
சம்பவங்கள்போதுந்தலைமுறைக்கும் வம்பியரா. (கசுசுஉ)

யுற்றமனையாட்டிகளிலோங்குமிளையாளொருத்தி
யெற்றிமதித்தென்றலையிலேறினுள் மற்றொருத்தி (கசுசுங)

யண்டாதநீலியடங்காப்பிடாரிமணங்
கொண்டேற்குமஞ்சாக்கொடுஞ்சூரி மண்டமரில். (கசுசுச)

விற்காட்டுந்திக்குவிஜயமதிலென்படையைப்
பற்காட்டியோடும்படியடித்தா ளிற்சூரிய. (கசுசுரு)

மாதிவளோ ௵ பொல்லாத ... வம்பியினுலன்றோநான்
பாதியுடலானதையும்பாருங்கா ணுதிமுத. (கசுசுசு)

லஞ்சுதலையாகிநின்றேனங்கமெல்லாஞ் * சூடுபட்டேன்
கொஞ்சமிதிபாணடுக்கக்கொண்டுநின்றே னஞ்சமையி. (கசுசுஎ)

---

௦ பார்வைமதி-ஆதவன். * அங்கம்-எலும்பு.

௵ பொல்லாத-பொள்ளாத வம்பி வாசனையுடையவள்.

... சூடு-அக்கினிமயம்.

* நடுக்கம்-நடுத்தலை.

லாட்டி[illegible]ட்டுக்கோட்டிகொண்டாளந்தோவிதையுனைக்கி
னூட்டிதுள்ளார்பின்னுநகைப்பரே மீட்டுமந்தக். (ககூசுஅ)

கட்டழகிசொல்வார்த்தை ⁰ கண்டு - பயந்தேனென்று
பட்டம்வைச்சுத்தேவர்பழிச்சார்கள் நட்டணையாய்ப். (ககூசுகூ)

பிட்டுக்குமண்சுமந்தேன்பின்னிடையன்கைவாளால்
வெட்டுண்டேன்மேனிமிகச்சிவந்தேன் செட்டியெனக். (ககூஎ0)

கோதில்வளைகள்விற்றேன்கொள்ளாவிறகுவிற்றேன்
சாதிகெட்டவேடனெச்சில்தானுண்டேன் மாதுணிவாய்ச். ()

சென்றண்டர்காத்திருக்கதில்லையினிலாடித்தே
னென்றென்னையம்பலத்திலேற்றி ரன்றொருநாள். (ககூஎ௨)

மாவகத்தைக்கொண்டவஞ்சர்வாழ்புரத்தைநானெரித்து
மீசவகத்தைக்கேட்டாற்சிரிப்பாகும் பூவில்மறு. (ககூஎங)

போக்கில்லானென்றுமுழுப்பூச்சாண்டியென்று * மண்டங்
காக்கையென்றும்பொல்லாக் ⁰ கசடனென்றும் நோக்கரிய ()

கள்ளன்மழுமாறியென்றுங் ‡ கஞ்சாக்குடியனென்றும்
பிள்ளைதின்னிப்பேயனென்றும்பித்தனென்றும் முள்ளடிய. ()

⁰ ஈனமுள்ளானென்றுமிருகாலுஞ் சந்துமிகப்
போனவிவனென்றும் † புழுக்கையென்று மானமட்டு. (ககூஎசு)

மெய்யில்லானென்றும் வடிவேலருட § மாமிதனைக்
கைகலந்தான் * போகிக்கடையனென்றுஞ் செய்யதங்கை. (ககூஎஎ)

மேலனலைமூட்டிவிட்டவீம்பனென்றுமென்பேர்சொன்
னலெவர்க்குங் ÷ கேவலமுண்டாமென்றுந் நால்முனிவர். ()

⁰ கண்டு கற்கண்டு - பயம்பால்

* அண்டங்காக்கை உலகங்காக்குங்கடவுள்

⁰ கசடன்கஜத்தைஅடஞ்செய்தவன்

‡ கஞ்சாக்குடியன்-மேலானகுடும்பம்

⁰ ஈனமுள்ளான் - குற்றங்கினையாதவன்

சந்து·தாது·புழுக்கை-உஷ்ணமுடையவர்

† மெய்யில்லான்-சரீரமில்லான்

§ வேலன்மாமி மான்

* போகிக்கடையன் - நாககங்கணன்

÷ கேவலம் மோக்கம்.

யடகுணக்துக்கொள்வீரென் றுபரணந்தாற்
படையுநடுங்கும்பாம்பாங் கடமேவு. (ககககச)

மும்பல்மெய்த்தோளுக்குமுடையாயணிந்திருக்கு
மம்புலித்தோளுக்கும்விலையார்கொடுப்பார் டம்புமுடை. (கககக௫)

யாருசவெண்மையணிக்கிலதைக்கண்டவர்கள்
சீசியென்றேசிபுமைச்சீறுவார் மாசாய்ந்த. (கககக௬)

வக்குமணிமைக்கொடிந்தலார் சீந்துவார்கள்வெறுந்
சக்கைகயெருக்கமந்தார்சாரமுமன்றோ கைக்குட். (கககக௭)

டருக்குற்றகூலமதைத்தந்தாலோர் தூற்றிக்
கருப்பட்டியீவாள் கடையில் விருந்தின்ற. (கககக௮)

வீடோமயானமத்தவெட்கந்தேடென்னசெயலோ
ஞேடன்றிக்கையிலில்வேறொன்றுமில்லை நாடிக். (கககக௯)

கணமாய்நினைப்பீரென்காரியந்தைநீவிர்
விணவியும்ருல்வெட்டி வெளியா மனையவோ. (௨௦௦)

## விஷ்டுணுசரித்திரங்கூறுதல்.

ரெந்தகைமையாவுமிசைத்தேனென்மைத்துனனார்
தந்தகைமையிற்சிறிதுசாற்றுவேன் மைந்தனுடன. (௨௦௦க)

காதலுறப்போராடிக்காற்பங்குக்காய்நிலத்தை
வாதிலுழுதானேஎவாயனுய் மோதல். (௨௦௦௨)

முதிருங்களத்திலுள்ளார்மொய்த்திருக்கப்போரிற்
கதிரையொளித்துவைத்தகள்வ னதுவுமன்றிப். (௨௦௦௩)

பாடியிடைமாதருறிப்பாறயிர்மோர்வெண்ணெயெலா
மோடிநிதங்காணுமலுண்ணுதல்கண் டாடியவர். (௨௦௦௪)

நின்றன்னைதன்பாணிகழ்த்தவுரலோடுபற்றிக்
கன்றனையுந்தாம்பாற்கடிதுகட்டி யின்றுமுதல். (௨௦௦௫)

வெண்ணெய்திருடாதேநீமெல்லியரைமானபங்கம்
பண்ணுதேசேஷ்டைகளைப்பண்ணுதே மண்ணையள்ளி. (௨௦௦௬)

யுண்ணுதேயென்னவுறுக்கிப்பயமுறுத்தித்
தண்ணார்ந்தகைசிவக்கத்தானடித்தாள் கண்ணணிந்தப். (௨௦௦௭)

ஞேங்கித்தலைதகரவோர்குட்டுவைத்திவனைத்
தாங்குசிறையிலங்குதானிட்டான் வாங்கலுறு. (உ0கடு)

மைச்சலதிப்பாருலகில்மானிடர்கள்யாவரையு
மச்செல்லாமொன்றுயமைவித்துப் பக்ஷமுடன். (உ0கசு)

வாழ்ந்திருக்கவுஞ்சிலரைமாவறுமையாலிடைந்து
தாழ்ந்திருக்கவும்பலரைத்தாபித்தான் வாழ்ந்தவரி. (உ0கஎ)

லாசுகவிநாவலர்களாய்ந்துதமிழ்ப்பாடினுமோர்
காசுதவாலுத்தக்கயவராய் மாசுளராய். (உ0கஅ)

நல்விற்பனமிலராய்நாணுப்பழியினராய்ச்
செல்வநிலையென்றசெருக்குளராய்க் கல்வி. (உ0கசு)

யருமைதெரியாமுட்டாளாய்ப்படைத்துவிட்டான்
பரவுசுத்தமுட்டாட்பதுமன் மருவுமிவன். (உ0ச0)

செங்கரத்திற்றண்டுமெண்டைதீட்டும்படைதவிரப்
பொங்கமுறவேறுபொருளுமில்லைத் தங்குதற்கிங். (உ0சக)

காலயமுமில்லையருள் பூசனையுமில்லை
யேலுமிவன்செய்திருக்கட்டுஞ் சால்புறுமென். (உ0சஉ)

## குமரவேள் சரித்திரம் கூறுதல்.

மைந்தர்களிற்பின்னவனும்வைவேற்குமரனென்பான்
செந்திருமான்மெச்சுந்திருமருகன் முந்துகுரு. (உ0சங)

வன்னவயன்றுனரியோம்பிரணவத்தின்
றன்னுரையேசொல்லத்தறுகிடினும் பொன்னம்மான். (உ0சச)

பாலனென்றுசற்றும்பச்சாத்தாபமின்றியிரு
காலில்விலங்கிட்டடைத்தகன்னெஞ்சன் மேலுறையுர் (உ0சடு)

தேவருக்கெல்லாமதிபன்றேவேந்திரன்மகளார்
பாவைதெய்வகுஞ்சரிதன்பாலிருக்கக் கேவலமாய்க். (உ0சசு)

வேட்கரோதன்சொற்கொண்டுவனத்துபுக்கி
வேட்டர்தரமிகுப்பவேடனுய்த் தூக்குகிழப் (உ0சஎ

பண்டாரமாகிப்பருவேங்கையுமாகிக்
கொண்டார்நகைக்கக்குறம்பாடி வண்டாரம். (உ0சஅ)

வந்திக்குமாரவினுள்வள்ளியின்மேலாசைகொண்டு
முந்துகுலதர்மமுறைமைதப்பிச் சிந்தையினில். (உ0சகூ)

நாணுதலுமின்றியந்தநாறக்குறக்குலத்தில்
வேணுமென்றேசம்பந்தமேவினான் நீணிலத்திற். (உ0ரு0)

பின்னையொருமாமிதனைப்பெற்றவள்மேலாசைவைத்து
மன்னுமதன்வேலையுறமாட்டினான் பொன்போலும். (உ0ருக)

பெற்றோர்க்கடங்குமென்பாபிள்ளையிவனெனக்குச்
சற்றுமடங்கான்றகப்பன்சாமியே தொற்றுவனைச். (உ0ருஉ)

செட்டியிவன்வேடுவர்கள்சேர்க்கையினாலன்றெருநாட்
† சட்டியிலே ʘ கொக்கவிர்த்துச்சாப்பிட்டான் மட்டடங்காக். ()

கோழிபிடிக்கியென்றங்கூருலகிற்பேரெடுத்தான்
வாழ்வணிகமூகையெனவந்துதித்தான் சூழுமலைக்.(உ0ருச)

குன்றுகடோறுந்திரிந்துகூத்தாடியானதல்லா
லன்றவனுக்கேதேனுமாஸ்தியுண்டோ வென்றுஞ். (உ0ருரு)

விநாயகர் சரித்திரம் கூறல்.

செழித்தபுகழ்முத்தமகன்செய்திசொல்லக்கேளீர்
பழிச்சுலகோர்நாளும்பழிக்க வழிக்கரையில். (உ0ருசு)

[illegible]மவித்தனியிருந்துவேற்றுருவந்தானுகி
[illegible]மூவாதமெய்த்தூங்கல்மூஞ்சியா யோவெனவே. (உ0ருஎ)

[illegible]ன்வாய்ப்பல்லொன்றுடைந்துமூக்குங்கிடையாமல்
[illegible]ன்வாயொன்றில்லாமனல்வாயாய்ப் பொன்வாய்ந்த. (உ0ருஅ)

[illegible]ண்ணுஞ்சுருங்கிருகாதுமுறமாகியயன்
[illegible]ண்ணிவைத்தகாலுஞ்சப்பாணியாய்த் தண்ணீரின். (உ0ருகூ)

சாலதனையொப்பாய்ச்சரிந்துமகோதரம்போல்
மேலும்பெருவயிறுவீங்கியே ஞாலசணம். (உ0சு0)

† சட்டி-ஆறுவதுதிதி. ʘ கொக்கு-மாவாரணஞ்சூரன.

போலுமுடல்மூவிடத்திற்பொத்துமிகச்சீழ்வடிந்து
மூலத்திலேவிழுந்துமுற்றினதும் பாலகனைப். (உ0சுக)

பற்றியொருவீட்டெலியும்பாய்ந்துகொடுபோமென்றாற்
பெற்றமனம்பித்தலவோபேசுங்கால் சற்றுமிகைக். (உ0சுஉ)

கண்டுமெனத்தாழாமற்காலவிடமென்னுநஞ்சை
யுண்டேனுடுக்கியுடன்மெலிந்தேன் விண்டுமெனும். (உ0சுங)

மாமனூர்தன்வாயில்மண்போட்டறைந்துகொண்டு
சேமவுடல்கறுத்துத்தேங்கினான் பூமலரோ. (உ0சுச)

னின்னமறைவாயிருந்துதொழிலயர்ந்தங்
கன்னமிறங்காமலலையிருன் மன்மதனுஞ். (உ0சுரு)

சீற்றவனலால்வெதும்பித்தேடுமெந்தன்கூர்விழிக்குத்
தோற்றான்பிரமாதிகட்குந்தோற்றானே யாற்றுகுகன். (உ0சுசு)

தன்பிறவிக்குள்ளஞ்சலித்துமனங்கசிந்து
பின்புகண்ணீராறாய்ப்பெருகியே முன்பிலய்ய. (உ0சுஎ)

மீறுகின்றசத்திமிகவேயதிகரித்துக்
கூறுபட * பிணிமுகத்திற்கொண்டு நின்றான் மாறுது. (உ0சுஅ)

கண்ணோடுகண்ணையொருக்காலும்பொருந்தாமல்
விண்ணோர்களெல்லாம்விழித்திருந்தா ரெண்ணுமெங்கள். (உ0சுகூ)

காரியநிர்வாகமெல்லாங்கண்டரோவின்னமுமந்
டாராலுஞ்சொல்லவடங்காதே நேர்மொழிந்த. உ0எ0)

விச்சரிதங்கேட்டுமனமேங்காதீரெவ்விதமும்
பட்சமுடனுங்களைக்காப்பாற்றுவே னிச்சயங்கா. (உ0எக)

ணின்னதாரித்ரமெவராலொழியுமென்றே ற
யுன்னிப்பலவாயுசாவினேன் அன்னவனைச் (உ0எஉ

## சிவபெருமான் பாட்டுடைத்தலைவனையறிவித்தல்.

சித்தத்திற்கண்டேனச்சேரமானுக்குமிவன்
பத்தத்தனையதிகபண்பினை னித்தலத்தில். (உ0எங)

மங்களமென்மேலும்வளரமனுவிக்யானச்
செங்கோல்செலுத்துந்திறலுடையான் செங்கமலப் (உ0எச)

---

* பிணிமுகம்-மயில்.

பூமானூரத்தான்புகழுடையனேந்திரநற்
கோமானளித்தகுலக்கொழுந்து ஓமெனவு. (உ0எடு)

மூவடியாய்நின்றுலகில்முத்தொழினடாத்துமெந்தன்
சேவடியையுள்ளிருத்துஞ்சிந்தையான் மாவளஞ்சேர். (உ0எகூ)

திண்ணியவான்மூர்த்தியவோர்ஜென்மாந்திரத்திலவன்
பண்ணியதபோபலத்தின்பான்மையால் மண்ணுலகை. (உ0எஎ)

யாளப்பிறந்தானவனேமனுகுலத்தி
னீளச்சிறந்தநிலைமையினான் வேளைப். (உ0எஅ)

பொருந்துமெழிலான்புலவர்கள்கொண்டாடித்
திருந்துவிமாலைபுனைசீமான் பரிந்தேனது. உ0எகூ)

பாய்சூரியதோழனையொப்பானகனபாக்கியவா
னேங்குவலக்கண்ணுமுயர்குலத்த ஞன்குமறை. (உ0அ0)

யாய்ந்தவாக்குநாவலர்க்குமாதுலர்க்குமிக்கபொரு
ளீந்துசிவந்தவிருகரத்தான் றும்ந்துமிகப். (உ0அக)

பொன்மலர்கொண்டேத்துசிவபூஜாதுரந்தரன்மா
தன்மபூபாலன்சவுரியவான் அன்னமதி. (உ0அஉ)

யாரணமுங்காணவறியாகமதருளைப்
பூரணமாய்ப்பெற்றபுகழ்வேந்தன் வீரசிவ. (உ0அங)

கங்கைநகர்க்காதீனகாவலவன்பாவலர்மேற்
றங்குமபிமானமுள்ளசற்குணவான் வெங்கயந்தேர். (உ0அச)

கூந்தலணிமாவுகைக்குங்கோமானுயர்துரைச்சிங்
கேந்த்ரனுக்கிப்போழ்திலிதமுறநா னைங்கெழுதி. (உ0அடு)

யேந்துதிருமுகமொன்றீவேனதையவன்பாற்
போந்துநல்குமெல்லைமனம்பூரித்துச் சாந்தகுண. (உ0அகூ)

விற்பனவானுந்தமக்குவேண்டுவனவெவ்வளவோ
பற்பலசம்பத்துகளும்பாலிப்பான் முற்பான, (உ0அஎ)

பத்திரனென்பானெருவன்பாரிலிலம்பாடடைந்
கஸ்திதனேநீக்கக்கருதியே பத்திதனி. (உ0அஅ)

லன்பன்மலைநாட்டுக்கதிபனந்தச்சேரமான்
தன்பாலனுப்பத்தகுந்தபடி பொன்பரிக (உ0அகூ)

செய்தானவனிலுமித்தேர்வேந்தனிகையினிற்
கைதாளென்சொல்லேவணக்கற்பகமே   மெய்யுரையீ. (உகூ00)

## சிவபெருமான்பாட்டுடைத்தலைவற்கு திருமுகங்கொடுத்தல்.

தாகையினானீவிரனைவர்களுமிக்கணமே
யேகியந்தப்பூதிபாலெய்திய   மாகனமாய்த். (உ0கூக)

தேக்குபொருள்பெற்றுச்செழித்துவாழ்வீர்களென்ற
வாக்குக்கடங்காமகிழ்ச்சிகொண்டு   நோக்கரிய. (உ0கூஉ)

சீலர்மதுரேசரையுந்தேவிகயற்கண்பதமுந்
சாலவணங்கித்தமிழ்ப்பாடி   யாலயத்தை. (உ0கூங)

முக்கால்வலம்புரிந்துமூர்த்திதிருமுகம்பெற்
றக்கோவில்வாயலரணீங்கிச்   செக்கர்வண்ணக். (உ0கூச)

## திருமுகம்பெற்றுப்பிரபுவின் சமுகத்துக்கேகுதல்

கோகனகமாதுகுடிகொண்டசிவகங்கைநகர்க்
கோகையுடனேகவாருமித்தோங்   காகங்கள். (உ0கூரு)

கூவிவலமாகிவரக்கோலக்கருடனிடந்
தாவியரிகீர்த்தனமிசைப்ப   யாவுமினிக். உ0கூசா)

கைகூடிவந்ததெனக்காதலுடனெய்தியுயர்
மெய்கூடிவாழ்நகனாமேவினேன்   தெய்வீகத். (உ0கூஎ)

## சிவகங்கை நகரச்சிறப்பு.

தேரோடுவீதிகளுஞ்செம்பொனெடுமாமதிலுங்
காரோடுலாவுகவிக்கொடியுந்   சீரார். (உ0கூஅ)

வனசத்திரள்மலிந்தவாவிகளும்வந்தோர்க்
கனசத்திரமுந்வுமன்புந்   தினமுமறை. (உ0கூகூ)

யாய்ந்துநெறிதிறம்பாவந்தணர்கள்வீதிகளும்
வாய்ந்தவணிகர்மணிமறுகும்   வேந்தருக்கு (உக00)

பாவலியமாமகுடமுடிசூட்டநல்கும்
பூமன்னர்வாழும்பொன்மறுகுங்   கோவைசியர், (உக0க)

வீதிகளுமிந்த்ரகுலவீரர்மணிவீதிகளுஞ்
சாதிபலவர்னத்தார்தன்றெருவு மோதுசனக். (௨௧0௨)

கூட்டமுடனேதினமுங்கொள்ளல்விற்றல்செய்துநலங்
காட்டியொழுங்கானகடைத்தெருவுந் தீட்டியொளிர். (௨௧0௩)

மாசுதைகள்தீறறிவயங்குமேன்மாடிதிகழ்
ராசபந்துக்களியல்மறுகுந் தேசுலவு. (௨௧0௪)

மன்னகரத்தினலங்காரமத்தனையு
மென்மேலும்பார்த்துவியப்பூறிப் பின்னுமெந்த. (௨௧0௫)

## அரண்மனைச்சிறப்பு.

மாநகரமென்னுமநாணரிப்பதக்கமிசை
யானநடுநாயகமணிபோல் வானளவிச். (௨௧0௬)

சிங்காரமாகச்சிறந்தமகாமேருவென
மங்காதவாசல்மணிமுகப்பும் தங்கவுயா. (௨௧0௭)

மாடிகளுஞ்சுற்றியனேகநெடுமதிலும்
மேடைகளும்பந்தடிக்குமேடைகளும் நீடுதமிழ். (௨௧0௮)

தேரிங்கிலீஷ்பூதம்றேகபலமாஞ்சிலம்பஞ்
சார்வுறமேலோங்குகல்விச்சாலைகளும் பேர்பெரிய. (௨௧0௯)

கோபுரமுஞ்சொர்ணக்குடங்கள்பதித்திலங்கு
தாபரமும்வெள்ளைச்சயடாலும் தூபியினில். (௨௧௧0)

மங்குல்படிந்துலவும்வண்மையெலாங்கண்டிதுவே
யெங்கோனரண்மனையென்றெய்திஞேக் திங்கள்மணி. (௨௧௧௧)

நற்படிகத்தாலமைத்தநல்லசபாமண்டபமும்
பொற்பணியினுலிழைத்தபோதிகையு முற்படுத்தே, (௨௧௧௨)

வஸ்தானசத்திரதர்மாசனமுஞ்சீமைய்யய
னத்தொடுதேர்பார்புரியாபீசுகளு மொய்த்தஜனக். ௨௧௧௩)

கூட்டமிடும்பேரொலியுங்கூரியபியோன்கணின்று
க்யாட்டுடன்பாராக்கொடுக்குங்காவல்களும் நாட்டரசர். (௨௧௧௪)

நாடித்திறைசெலுத்தநற்சமயங்கிட்டாமற்
கூடிக்குலாவுசதிர்க்கொட்டகையும் நீடுமது. (௨௧[illegible])

வாரணத்தினிலையமும்வாம்பரியின்சாலைகளும்
பூரணகும்பங்களிட்டபொன்முடியும் வீரர்களை. (உககசு)

வேங்கையுடனேபொருதவிட்டுவிளையாடல்புரி
தாங்குமிருகாசயத்தின்சாலைகளும் பாங்கான. (உககஎ)

பூஷணநல்லாடைபொருந்துநிதிபொக்கிஷமும்
மாசகலுக்ராணமணிமண்டபமும் வாசமனே. (உககஅ)

வித்தியாபீசுமிக்கமேதினிக்காதாரமுள்ள
வர்த்தனைரிக்காரட்டுமால்களுமெய்ப் பத்தியுட. (உகககூ)

ஸிம்பர்தனைக்காக்குமிராஜராஜேஸ்வரியா
மம்பிகையாள்வீற்றிருக்குமாலயமு மம்புவியாள். (உகஉ0)

மாபோஜராஜேந்த்ரன்வந்துதினஞ்சேவைபுரி
தேபூஜைக்கோவிற்றிருப்பணியும் ராஜகுல (உகஉக)

வன்னநடைமின்னர்களார்ந்துஜலக்கிரீடைசெய்யும்
வன்னமணிநீராவிமண்டபமும் அன்னவதில். (உகஉஉ)

வாழைகொழுமிச்சைவளர்மாதளைகமுகு
சூழுமலர்வாசமிகுசோலைகளும் கேழ்கிரணத். (உகஉங)

திங்கள்மணியாலிழைத்துச்சேருஞ்சிகரமதிற்
றங்கக்கலசந்தனைநாட்டிப் பொங்கு (உகஉச)

மகிரொளியம்பாரிபுனைந்தஷ்டகஜந்தாங்குஞ்
சவுமியவிலாசச்சபையுங் கவினுறவே (உகஉரு)

தங்கத்தகடழுத்தித்தாமணிகுயிற்றி
யெங்கும்பளீரென்றிளங்கதிர்போ லெங்கள். (உகஉசு)

சவுரியவான்மேவிச்சபைவீற்றிருக்குங்
கவுரிவிலாசத்தின்கதிப்பும் நவமுலவு. (உகஉஎ)

செம்பொனணிமேனிலமுஞ்சித்ரமணிமேடையும்பொற்
கம்பமிகநாட்டிபலகட்டிடமு மம்பவளத். (உகஉஅ)

தூண்கணிறுத்தித்துலங்குகருங்கற்சவுக்கை
மாண்புகளும்ரத்னமணியரங்கும் காண்கரிய. (உகஉகூ)

விந்தையெல்லாங்கண்டுவியப்புற்றிமையவர்கோ
னுந்துமணிமாலுமிதற்கொவ்வாதென் றந்தமுடன். (உகங0)

சிந்தைமகிழ்ந்துஜெயஜெயவென்றூர்ந்தஜனச்
சந்தடியுட்சிக்கித்தகையாறி விந்தைவளர். (உகஙக)

மன்பானெருங்கிவருகாரியக்காரர்
தன்பானெருங்கிமெல்லச்சாற்றினோ மென்சார்ந்த. (உகஙஉ)

நீவிர்கள்யாரென்றூர்நிகழ்ந்ததையெல்லாம்புகல
வாவலுடன்கேட்டவருமன்புற்றுத் தேவபிரான். (உகஙங)

வாய்மைதருநல்லமகிழ்ச்சிச்சமயமிதே
போய்வாருமென்றுள்ளேபோகவிட்டார் தூயமணி. (உகஙச)

பத்திபத்தியாகப்பதித்தகவுரிவிலா
சத்திலிலங்குந்தனிமுகப்பிற் கத்தனங்கு. (உகஙரு)

பீதாம்பரமுடுத்திப்பின்னுநிலையங்கிதொட்டு
மீதார்ந்தசால்வையதின்மேலணிந்து ஆதியடி. (உகஙசா)

சேருமுடிமீதிற்றிகழ்ந்தமகுடமகா
மேருவிடைத்தோன்றும்வெயில்நிகர்ப்பச் சாருமிரு. (உகஙஎ)

காதில்வயிரக்கடுக்கனெடுமுருகுஞ்
சோதிப்ரகாசச்சுடர்விரிக்கச் சாதிமணி. (உகஙஅ)

யங்கதகேயூரவணிகண்டிவாகுவலை
யங்கள்புயத்திலழகார்ப்பச் செங்கமலை. (உகஙகூ)

மார்பினில்முத்தாரமதாணிப்பதக்கமுடன்
றூர்பொருந்துபூணூற்சரமிலங்க நேர்கரத்திற். (உகச0)

கைக்கடகங்தோடாக்கணையாழிமோதிரங்கள்
மிக்கவெழில்காட்டிமினுமினுக்க வுக்கமதிற். (உகசக)

சிங்கமுகப்பிட்டுசிறந்தநவரத்னமணித்
தங்கவரைஞ்ஞாணுந்தகதகென வெங்களத்திற். (உகசஉ)

சத்துருக்களாவிதனையருந்துங்குற்றுடைவாள்
வைத்திடையிற்சேர்த்துவரிந்துகட்டிக் கத்துகடல். (உகசங)

## பிரபுவின் கொலுச்சிறப்பு.

கோநிலமெலாம்புரக்குமால்கவுரிவல்லவனெம்
கோன்துரைச்சிங்கேந்த்ரன்கொலுவாகத் திரனே. (உகசச)

ஜெயமாதுநின் றுஜெயம்ஜெயமென்றேதிப்
புயமேனடனம்புரியச் சுயமதிய. (உகசரு)

மாமுகத்தைத்தன் னுடையமாளிகையென்றேமதித்துப்
பூமலராள்மேவிப்பொலிந்தோங்கப் பூமா. (உகசசா)

பராக்குபலவீமாபராக்குரெகுராமா
பராக்கென் றுகட்டியர்கள்பாட விராக்கதிர்போற். (உகசஎ)

கொங்குலவுபூச்சக்ரவாளக்குடைநிழற்ற
மங்கையர்கள்வெண்சாமரையிரட்டப் பொங்குவியம் (உகசஅ)

பூவாடைபோலுமிகப்பொம்மென்றுலிக்கரட்டைப்
பாவாடைகுஞ்சம்பணிமாற மாவீணை. (உகசசு)

மத்தளங்கைத்தாளசுரமண்டலம்புள்ளாங்குழலோ
டொத்திசைக்கராகவொலிமுழங்கத் தத்தைநிக. (உகரு0)

ரன்னவிலைமாதரபிநயங்கள்பாராட்டி
நன்னயஞ்சேரின்படம்புரிய பொன்னன்ன. (உகருக)

எம்ப்ரஸ்மகாராணியார்கவர்னர்யாவர்களு
நம்பியுளமதிக்குநற்கனவான் தென்புமிகும். (உகருஉ)

தண்டுசிவகங்கைக்கரசுநிலைகாட்டிவைத்து
விண்டலத்துங்கீர்த்திபெற்றமேன்மையான் தண்டுளவ. (உகருங)

நாராயணாயநமவென்றனுதினமும்
நேராய்த்துதித்துவருநேர்மையான் சீரார்ந்த. (உகருச)

தொன்மதுரைமீனாக்ஷிசோமசுந்தரேசரிரு
பொன்மலர்த்தாள்போற்றும்புனிதவான் நன்மைதிகழ். (உகருரு)

மங்களமல்லேனிகுலவானழகர்சாமிதரு
சிங்கமெனவந்துதித்தசெல்வவான் பொங்கு. (உகருசா)

சகலகலைவலவனயஜனகரமணியநிபுண
னகிலமுழுதிசைபரவுமமிர்தகுண னுகுதருண. (உகருஎ)

வுசிதமுகிலனையகொடைவுதவுகரதலனிலகு
சசிவதனவபயஜெயதரபுனிதன் வசியமிாக. (உகருஅ)

மதமெழுதுபுயசயிலவனசதளநயனகெறு
விதகரடசமரகரியிசையுதையன் மதனதுரை. (உகருசு)

பண்டலர்தண்டமடாந்துஜெயங்கொடு
வண்டடர்தும்பைவனைந்திசை கொண்டிடு. (உ.கசுo)

தந்திரநன்சதுரங்கதளஞ்செறி
யிந்திரனென்றுலகின்புற வந்துபுகழ் (உகசுக)

மன்னுஜமீன்ஏஜண்டுமாலவேங்கடசாமி
மன்னனருகில்மகிழ்ந்திருக்கப் பின்னனுயர் (உகசுஉ)

காரியவான்மானேஜர்காசிவிஸ்வநாதமுகில்
நேரிருந்துசீமையகவாணிகழ்த்தப் பாரிலா. (உகசுங)

தாயஞ்செலவுஞ்ஜகராஜர்கப்பமதா
லாயவரவுமதன்பெருக்கும நேயமனே. (உகசுச)

விர்த்திச்சிரஸ்தேதார்மிக்ககருணீகர்களும்
வர்த்தனைமிகுங்கணக்குவாசிக்கச் சித்தமதி. (உகசுரு)

வாய்ந்தவவதானவக்கீனகள்சோர்வுபடா
தாய்ந்தெழுதுநல்ராயசகாரர் வேந்தர்விடும். (உகசுசு)

அர்ஜியைவாசித்தங்கவர்க்கெழுதுமுத்தரவிற்
சற்சமையங்கண்டுசயன்வாங்கச் சொற்சிறந்த. (உகசுஎ)

பார்வேந்தர்சூழ்ந்துபணிந்துமனுக்கேட்ப
யோர்வேந்தர்தத்தமியல்கூற வீரியத்தைச். (உகசுஅ)

சார்ந்ததளகர்த்தர்களுந்தானுபதிகளுங்கற்
றோர்ந்தமனுசாஸ்திரவுசிதர்களுந் தேர்ந்திடமன். (உகசுகூ)

னீதிபுகழ்ந்தோதநெடுநாட்சிறையிலுற்றோர்
பாதமதில்வீழ்ந்துபணிந்துகெஞ்சப் பாதத்திற். (உகஎo)

சூட்டியகண்டாமணியுஞ்சோமத்தலைவிருதும்
நீட்டுசுடர்காட்டிநிகழ்ச்சியுறத் தோட்டுமல. (உகஎக)

ரானனமாந்தெள்ளமுதவம்புலியின்சோதிகண்டு
மானவர்கட்காவிமலரவிழச் சேனைதிகழ். (உகஎஉ)

ராணுவக்கூட்டங்களிடைந்துநெருங்கவலி
யாணவஞ்சேர்தந்திகிள்ளையார்ப்பரிக்க நீணிலத்திஸ். (உகஎங)

மாவளமுற்றோங்கிவளர்குவளைவேலிநகர்ச்
சீவிதம்பெற்றோங்குகனசெல்வத்தார் மேவுகன. (உகளச)

ராஜாக்கூட்டங்களிதஞ்சேரொழுங்காக
நேசமுடன்சூழ்ந்துநிறைந்துநிற்கப் பேசுபுளி. (உகளரு)

யங்குளத்தில்வாழ்வோராரியகுலகர்த்தாக்கள்
வங்கிசத்தில்வந்தமரபுடையார் பொங்குபட்டை. (உகளசு)

நாமநுதலிற்றுலங்கநாய்க்கமார்வாளேந்தி
மாமடங்கல்போலுமருங்குநிற்ப வாய்மைமிகு. (உகளஎ)

சேருவைக்கூட்டங்கள்சினத்தவடிவாளபிடித்துப்
போரெங்கேயென்றுபுயம்புடைக்க நேர்கையினிற். (உகளஅ)

றங்கமடற்கொண்டேலஞ்சார்வெள்ளிலைச்சுருளீந்
தங்கடப்பக்காரரடுத்துநிற்கத் தங்கமொரு (உகளகூ)

பாரமிட்டுவேலைப்பணிதிகழ்பொற்காளாஞ்சிக்
காரர்கையிலேந்திக்கதித்துநிற்க வாரமணிச். (உகஅ0)

சுற்றிலங்கச்சாலர்தைத்துச்சோடினைச்சிற்றாலவட்ட
வெற்றிவிசிறிக்காரர்வீசிநிற்க முற்றலிலுங் (உகஅக)

கள்ளற்கஞ்சாதகுடைக்காரரிருபாலுநின்று
வெள்ளித்தீவட்டிமிகப்பிடிக்கத் தென்னாட்வடி. (உகஅஉ)

வேலாட்கள்மொய்த்தவெடிக்காரர்மற்றுமுள்ள
காலாட்களகைகட்டிக்காத்துநிற்கச் சூழார்ந்த. (உகஅங)

கார்க்குலங்கள்போலுங்கருங்கிடாயொன்றொடொன்று
மூர்க்கமுடன்றாக்கிமுனைபொருதப் போர்க்குவரக். (உகஅச)

கூவிநிபமின்றிக்குரோதித்தயர்பொருதுஞ்
சேவலொலிச்சத்தஞ்செவிடுமண்ட மேவுசெவற். (உகஅரு)

காடைகவுதாரிகருங்கொண்டலாத்திகளுஞ்
சாடியொன்றோடொன்றுசமராடச் சோடியவல். (உகஅசு)

தாதுகளுமல்லாகளுந்தந்தொழிலைக்காட்டிநல
மீதுயர்வேடிக்கைமிகவிளைக்கச் சோதிடத்தி. (உகஅஎ)

லஞ்சாதநீரரரண்மனைப்புரோகிதாள்
பஞ்சாங்கமோதிப்பலனுரைக்கக் கஞ்சமலர்க். (உகஅஅ)

கோவணங்குந்தேபூஜைக்கோவிற்குருக்கள்மார்
தேவப்ரசாதந்தினமுதவ மேவிதுபோற். (உகஅகூ)

றட்டிலிட்டுமற்றத்தலத்தார்களீந்துபரி
வட்டமதுகட்டிமலர்சூட்டச் சிட்டரெனு. (உககூ0)

மாகனவித்வான்களிசைவாழ்த்தியருகிருக்கப்
பாகவதாள்சங்கீதப்பாட்டிசைக்கப் பூகம்விளை. (உககூக)

கேழ்மணிசேர்கொட்டகுடிக்ராமமகாஜெனமும்
வாழ்வுயர்வேம்பத் தூர்மகாஜெனமுந் சூழ்பிரம. (உககூஉ)

னூர்வாழ்மகாஜெனமுமோதருவேதாங்கமதைப்
பார்வையினிற்றேர்ந்தகனபாடியரும் பூரணமாய்ப் (உககூங)

போதநெறியாகமபுராணமுணர்சாஸ்திரிகளு
மாதிமறைவைதிகநூலந்தனரும் நீதிபரன. (உககூச)

மாசிர்பொருந்திமகிமீதிலவாழ்ந்தி லெளன்
ருசீரவதிந்தக்ஷதைவழங்கப் ப்ரீதனும். (உககூரு)

மன்னர்களிற்கீர்த்திபெற்றமாறுந்ரபாணடியனபோல்
மின்னியசிங்காதனத்திலவீற்றிருந்த னன்றமிலேங். (உககூகூ)

கண்டமயிலிட்டமெனக்காமுற்றிறைஞ்சியெங்கோன்
கொண்டகருணைக்குறிப்பறிந்து மண்டலிகர். (உககூஎ)

## மகாநாட்டார்பிரபுவைக்கண்டுபுகழ்தல்.

மன்னுவிஜயவிக்ரமார்க்கசிலாக்கியசம்
பன்னநமக்கரசர்ப்பாண்டியா கன்னுவ. (உககூஅ)

தாராதலவடலர்த்தாராவெளியவர்க்கா
தாராவுதாராசவுந்தரா தீரரண. (உககூகூ)

வீராகெபீராவினோதரசகல்வியலங்
காராசிங்காராசண்டீரவா ஆரமுத. (உஉ00)

சோமாநல்லன்னசத்ரசோமாசிறந்தஜெப
பூமாவிற்காமாபுரந்தரா தாமபல. (உஉ0க)

வீமாசய்க்ராமாவிவேகப்ரதாபபல
ராமாசீராமாநரேந்திரா மாமதகோ. (உஉ0உ)

தண்டாவுத்தண்டாசமரகோலாகலதோர்த்
தண்டாதிதண்டாதசற்குண தண்டமிழ்ற். (உஉ0ங)

# திருமுகவிலாசம்.

தேர்ச்சிப்பெருங்கடலேதேசாபிமானமதி
லூர்ச்சிதமுற்றோங்குமுடையானே மாச்சரியம். (உஉ0ச)

காட்டுமிகலார்கருவறுத்தன்னார்பதியைத்
தீட்டுபுலவோர்க்களிக்குஞ்செம்மலே நாட்டமொடு. (உஉ0ரு)

சொற்றவறுவள்ளல்துரையுடையனேசந்திரமால்
நற்றவத்தால்வந்தநவமணியே நற்றவனைச் (உஉ0சு)

காக்கும்பெருமானேகண்ணகன்றஞாலமதி
லார்க்கும்பெரியவரசனே தேக்குபுகழ். (உஉ0எ)

போஜராஜேந்த்ராபுவனபரிபாலகா
ராஜராஜேந்த்ரஜனரக்ஷகா விசியன்னான். (உஉ0அ)

மான்சிரமற்றோயவடியாசுகந்தொடுத்த
கோன்றனைச்சிங்கேந்த்ரவெங்கள்கோமானே மானிலத்திற். ()

றங்கரியபற்றமதிற்றனிலேந்துவாடினதும்
தேங்குமதுரைச்சிவன்பாற்செப்பியது யாங்கவரும். (உஉக0)

தேவரீர்க்காகத்திருமுகந்தந்தாரெனவு
மாவலுடன்கூறியருகுநின்றோங் காவலனும். (உஉகக)

## பிரபுசிவபெருமானைத்துதித்தல்,

தென்மதுரையீசரென்றதெள்ளமிர்தமாமொழிகேட்
டின்பமுறப்பூரித்திருதோளும் நன்கைத். (உஉகஉ)

திருமுகத்தைவாங்கித்திருவிழியிலொற்றிப்
பரவிப்பலதரமும்பார்த்துக் கருணைபுரி. (உஉகங)

மங்கையுமைபாகாமனோகராமான்மழுவுஞ்
செங்கைதனிலேந்துஞ்செயதரா கங்கைச். (உஉகச)

சடாதராவெள்ளிச்சபைதனிலன்றாடு
நடாகராவெள்ளிமலைநாதா கடாசலத்தின். (உஉகரு)

போர்வையுடையாபுராந்தகாவின்மதனைப்
பார்வையினிற்காய்ந்திடுபராபரா காரணைய. (உஉகசு)

கண்டாவகண்டாகராசங்கராவடியார்
கொண்டாடிவாழ்த்துங்குருபரா மண்டியிர்கட். (உஉகஎ)

காவியனையாயரகரசம்போமகா
தேவாவென்றேத்தியுட்டியானித்துக் கூவியெமமை. (௨௧௮)

வாருமெனவழைத்துமன்னியவிப்பஞ்சமதிற்
சார்வின்றிநின்றேமுதயங்கினீர் பாரிலுங்கட். (௨௧௯)

கன்பாகயாமிருக்கவையோநீரிற்றைவரை
யென்பாலேன்வாராதிடைந்தீர்கள் என்பாரம். (௨௨௦)

பூண்டானெனையும்பொருளாய்மதித்தனரோ
ஆண்டாரென்மேற்கருணையானவோ தேண்டியன்னுள் (௨௨௧)

ஓ னுமால்காணுகவேதாந்தமூர்த்திபரஞ்
சாதிதிருவாய்மலர்ந்தசொற்போலும் போதுகன. (௨௨௨)

பாக்கியங்கள்நல்கியுங்களபஞ்சமதைநீக்கிநி
தேக்களகையானெனவுஞ்செய்வனெனக் கோக்குவடு. (௨௨௩)

## பிரபுநாட்டாருக்குவெகுமதி செய்தமைகூறல்.

மேங்கவுயர்ந்தோரிறையாயிரக்கலங்கொண்
டோங்குகளஞ்சியத்திலோர்தினுசாய்ப் பாங்குளசம். (௨௨௪)

பாவுரியநெல்லிப்பதினாயிரக்கலமும்
பாவுமின்றவித்துமதிப்பாதியாய்ந் தாவியமுன். (௨௨௫)

னோர்க்குந்தவங்காவெருதுக்குழாங்களொடு
பார்க்குட்பலுகப்பசுநிறையும் கார்க்களிற்றைப். (௨௨௬)

பார்த்துநகைக்கும்பரம்புக்கடாக்கள்வயற்
சேர்த்துக்கிடைமறிக்கச்செம்மறிய டோர்ந்தலுறத். (௨௨௭)

தங்கபலபூஷணமுஞ்சார்ந்தபலதினுசும
ரொக்கத்திலோரிலக்ஷரூபாயு மிக்கவுள்ளந். (௨௨௮)

தேவையவாநீங்கச்சிறப்புகளுஞ்செய்தபின்னர்
மேவித்திருமுகவிலாசமதைப் பூவுலகிற். (௨௨௯)

## இப்பிரபந்தவித்வானுக்கு சம்மானஞ்செய்தல்.

சீர்த்தியுறப்பாடித்திகழவரங்கேற்றிவைத்த
மூர்த்திமுடிக்கங்கைமுதுகுலத்தன் பார்த்திபர்கொண். (௨௩௦)

டாடுமமிர்தகவிவில்லியப்பனுக்கு
நாடுடையான்சிங்கைநகரிசேர்ந்து நீடுமணி. (௨௩௧)

த்துவயிரக்கடுக்கன்மோகனப்பொன்மாலையொளிர்
ாத்துச்சரப்பணிதங்கக்கொலுசுஞ் சித்ரமணிக். (௨௨௩௨)

நக்கடகந்தோடாகணையாழிபொற்பதக்க
க்கரத்னக்குண்டலங்கண்மேன்முருகு சொக்கமணிக் (௨௨௩௩)

ண்டசரம்பாதசரங்கல்லிழைத்தமோதிரம்பொற்
ண்டையரைஞாண்சலப்கையுடன் கண்டைரெட்டைச். (௨௨௩௪)

ாலுவைபீதாம்பரங்கள்தக்கநிலையங்கிவ ணச்
சலைகண்டைச்சோமன்சிரப்பாகு மேல்வையுட. (௨௨௩௫)

னயாயிரம்பொன்னுடன் புறவேநல்கியென்றும்
வயமதிற்றனபோர் வார்த்தோங்கக் கைமேலாய்ச். (௨௨௩௬)

ாசுவதுமாகத் தகுந்தகிராமமொன்று
ாசனமுஞ்செய்துமிகத்தானல்கி வாசமெந்தை (௨௨௩௭)

வீடுகட்டித்தந்தான்வியன்குடைபல்லக்கியோச்
சோடினையாய்த்தந்தான்சுகந்தந்தான நீடிதினம். (௨௨௩௮)

மேன்மைவளரேஜண்டுவெய்சடவாசிமுகில்
நான்மகிழ்ச்சிகொண்டியர்ந்தசாலுவையும் நானூறு. (௨௨௩௯)

பொன்னுந்தகுந்தபலபூஷணமும்பூஸ்திதியும்
நன்னயமதாய்த்தமிழுக்குநல்கினான் பொன்னுலவும். (௨௨௪0)

காசிவிஸ்வநாதகனவான்மகிழ்ந்துமணித்
தூசொடுபொற்கண்டிகையுஞ்சூட்டினான் நேசமுள்ளா. (௨௨௪௧)

ரெல்லாருமிக்கதியீந்தாருயர்குணங்கை
வல்லான்றுரைச்சிங்கமாலேந்த்ரன் கல்வியுணர். (௨௨௪௨)

நேசத்தமிழ்ப்புலவனீடுலகில்வேறிடம்போ
யாசிக்காவண்ணமருள்கூர்ந்து ராசிக். (௨௨௪௩)

கனகாபிஷேகங்களிப்புறவுஞ்செய்தான
றனதான்யசம்பத்துந்தந்தான் இனிய. (௨௨௪௪)

வமிர்தகவிச்சிங்கமிவனுமெனவுங்கூறிச்
சமுகவித்துவானெனப்பேர்தந்தான் சுமுகமுடன். (௨௨௪௫)

சீர்தந்தான்செல்வத்திறந்தானெண்டிசைக்கும்
பேர்தந்தான்பேசப்பெலன்றந்தான் நேர்தந்திப். (௨௨௪௬

பார்மன்னன்செய்திடுமிப்பாரவுபகாரம்போ
லார்முன்னஞ்செய்தார்சொல்லஞ்சுகமே சீர்மன்னு. (உஉசஎ)

மண்ணுலகையாளவந்தமால்துரைச்சிங்கேந்த்ர துரை
யண்ணியநாட்டாரையருகழைத்து வண்மையுளீர். (உஉசஅ)

சிந்தையுடனீவிரினித்தேவையுள்ளகாரியத்துக்
கெந்தனிடம்வாருமினிதளிப்பே ஹுந்தமூர் (உஉசகூ)

சென்றளகையான்போற்சிறந்துமிகவாழ்ந்திருப்பீ
ரென்றுவிடைதந்தானிறையவனும் வென்றிதிகழ். உஉருo)

மாமாறன்றன்னையுளம்வந்தித்திறைஞ்சியந்தக்
கோமான்புகழைமிகக்கொண்டாடிக் காமுறர். (உஉருக)

நடந்துஜனம்நெருங்குமாஸ்தானவாசற்
கடந்துவெளிமாலிற்கலந்து மடங்கலன்னான். (உஉருஉ)

## நாட்டார்கள் தங்களூர்சேர்ந்து வாழ்தல்.

தந்தபொருளெல்லாந்தகுஞ்சகடமீதேற்றி
விந்தையுள்ளவாகனங்கண்மேலிவர்ந்து சிந்தைநனி. (உஉருங)

லொவ்விப்பொருள்பகிர்ந்துங்குண்மையுறவாடிமகிழ்ந்
தவ்வவர்களூர்புகுந்தாரப்பொழுதே நவ்வியினைக். (உஉருச)

கண்டமடமாதர்களுங்காதலரும்பூதலருங்
கொண்டெல்பூரித்துக்குதித்தெழும்பிக் கண்டமட்டு (உஉருரு)

முண்டார்களித்தாருகந்தார்செருக்கடைந்து
கொண்டாடினார்குலாவினா மண்டுகுழற். (உஉருசு)

கற்றைச்சடைப்பிடித்தகட்டறுத்துச்சீவிமலர்ச்
சுற்றுஞ்சிரவணியுஞ்சூட்டினார் மற்றுமுள்ள. (உஉருஎ)

பீதாம்பரமணிந்தார்பேராபரணமெல்லாம்
பாதாதிகேசம்வரைபண்ணிட்டார் மாதிரதி. (உஉருஅ)

போலழகுபெற்றார்புருடர்களுமவ்வாறே
சீலமதனைப்பாய்த்திருந்தினரே சேல்விழியார்க். (உஉருகூ)

கொட்டியவெள்ளவாற்போலுலர்ந்ததனங்கள்விம்மிப்
பொட்டெனப்பூரித்துப்புடைத்ததுகண் டிஷ்டமற்றங். (உஉசூo)

ாமையப்பர்போலுமடங்கிமிகவேகிடந்த
ாமயநாயக்கர்கதித்தெழும்பி யேமமென்றுஞ். (௨௨௬௧)

ாமமென்றும்பாராமற்சந்ததமதேதொழிலாய்க்
ாமவிளையாட்டிற்கதித்தனரே பூமிசையில். (௨௨௬௨)

## மழைவருஷித்துப் பஞ்சம்நீங்குதல்.

மன்னுயிர்கடோறுமருவுசிவசொக்கேசர்
தன்னருள்பூரித்ததயவறிந்து பின்னுதிரி. (௨௨௬௩)

வானநவக்ரகங்களவ்வவர்கடங்களைதாஸ்
தானங்கடன்னில்வந்துசார்ந்திடவும் வானுறமி. (௨௨௬௪)

யன்னளிராத்திரியேயார்த்தசப்தமேகமதின்
முன்னுமாவர்த்தமுகில்கிளம்பி மின்னலுடன். (௨௨௬௫)

விற்போட்டிரைந்திருட்டியேவுபமழைக்காலூன்றிப்
பொற்போனன்மாரிபொழிந்தனவே யற்பகலா. (௨௨௬௬)

யெட்டுநாளாகவிடைவிடாதெய்குமழை
சட்டமுடனெய்திடவித்தாரணியோர் பட்டடங்கா. (௨௨௬௭)

வானந்தவாரியினிலாழ்ந்திமனப்பூர்த்தியுறத்
தானந்தவமிரண்டுந்தானெய்த மீனுந்து. ௨௨௬௮)

வேகவதியேமுதலாய்வெள்ளங்கரைபுரண்டு
மாகனநீர்வாவியெங்குமல்கினவே சேகரமாய்த். (௨௨௬௯)

தேண்டுபசுக்கூட்டமுடன்செம்மறிகளுங்கொடுகி
யாண்டதெய்வசன்னதம்போலாடிநிற்க மூண்டவெயில். (௨௨௭0)

கிட்டப்பொருதகிளரெருமைக்கூட்டமட்டுஞ்
சட்டைபண்ணுமற்கனைத்துத்தாவிநிற்க முட்டநின்ற. (௨௨௭௧)

கோட்டைச்சுவர்களெல்லாங்கோடையிடிபோன்முழங்கி
நீட்டிநிமிர்ந்துநிலம்படுப்பச் சூட்டாலே. (௨௨௭௨)

## சராசரங்களெல்லாஞ் செழித்தல்.

தீய்ந்துகருகிச்செறிந்ததருககளெல்லாம்
நேர்ந்துதழைத்தோங்கிநிழல்கொடுக்கச் சோர்ந்துமிக்க. (௨௨௭௩)

கண்ணிலுங்காணுமற்கரிந்தபுல்லும்பூடுகளுந்
தண்ணிலைகளோடுதலைநீட்ட றுண்மையொடு. (௨௨௭௪)

தூங்கலாயன்றிடைந்ததும்பிக்குழாங்கள்மத
மோங்கியிறுமாந்தல்குரத்துநிற்கத் தேங்குதுகள். (௨௨௭௫)

மண்பறியத்தாளெறிந்தமாக்குலங்கண்மீறியெழு
விண்பரியைப்பார்த்துமிகநகைக்கப் பண்புறுநல். (உஉஎசு)

லானிரைகள்கன்றுகளீன்றுதரமுற்றேகாம
தேனுவெனப்பால்சொரிந்துந்தக்கமுற மாநிலத்தி. (உஉஎஎ)

லெய்தியசராசரங்களெல்லாஞ்செழித்துயிர்க
ளுய்தலைப்பெற்றுனந்தமோங்கினவே செய்களில்வந். (உஉஎஅ)

தேருழுவரோசைகளுமேய்வித்துணர்கலிப்பும்
நாரியர்நென்னூற்றுநடுமொலியும் பார்முழுது. (உஉஎகூ)

நன்னீர்மையந்தணர்களூன்மறையினோசைகளு
முந்நீர்த்தொனிபோன்முழங்கினவே பன்மலரிற். (உஉஅ௦)

பீறிவருதேனெழுக்கும்பேரினியமுக்கனியின்
சாறுமோராறுய்த்தலைப்பெய்தி மீறிவயல். (உஉஅக)

விந்தையுடன்பாய்நதிநூல்விஞ்சுசெழுஞ்சாலிவளர்ந்
துந்திவெளிவான்முகட்டையொட்டியதே முந்திவிளை. (உஉஅஉ)

செந்நெலரிந்துசுமைசேர்த்துக்களங்கொடுபோய்ப்
பொன்னசலமன்னபம்போர்வைத்துப் பின்னை. (உஉஅந)

வலிபகடுபூட்டிவழுநகற்றிப்பாடிப்
பொலிபொலியென்றோதிப்புகழ்ந்து கலியகற்றும். (உஉஅச)

புண்ணியனும்பூதலத்தைப்போஷிக்கும்நெல்லையப்ப
வண்ணலைக்கண்டானந்தமாகினோம் விண்ணிவர்ந்து. (உஉஅரு)

காணுந்தலைமேற்கணபதியைத்தாங்கியருள்
பூணுமலைபோற்பொலிந்தபூசகனைப் பேணிச். (உஉஅசு)

சுகந்தழைக்கவந்தருளுந்தூய்மணியைக்கையான்
முகந்துகண்ணிலொற்றிமுந்தரிட்டுச் செகம்புரக்கு. (உஉஅஎ)

மன்னர்க்குச்சேர்கடமைவாரந்தனைச்செலுத்திப்
பின்னர்குடிவாரப்பெருக்கமதைக் கொன்மருவு. (உஉஅஅ)

மைப்பகடுபூட்டியுயர்வையங்கண்மீதேற்றிச்
செப்பரியநன்மனையிற்சேர்த்தினோ மெய்ப்புகழ்சேர். (உஉஅகூ)

## செல்வம்பெற்று வாழ்தல்.

தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்கறனென்றாய்
கைம்புலத்தாரோம்பறலையென்று முன்புலமை. (உஉகூ௦)

வள்ளுவனுரன்றுரைத்தவாக்கியத்தையுள்ளிருத்தித்
தெள்ளிமையாய்மிக்கசிரத்தையுட        னெள்ளியநான். (உஉகூக)

மாமறையோர்போஜனங்கண்மாகேசுரபூஜை
க்ஷேமமுடனுடோறுஞ்செய்வித்து        நேமமுடன். (உஉகூஉ)

சூழ்ந்தவிருந்தோடருந்திச்சொற்கலைநூலாய்ந்துநலம்
வாய்ந்தசெல்வந்துய்த்தினிதாய்வாழ்கின்றேம்        வேந்தன்வடி. ()

வேலுடையான்முத்துவிஜயரெகுநாதனெனு
மால்துரைச்சிங்கேந்த்ரவரனருளாற்        சூல்முதிர்ந்து (உஉகூச)

திங்கடொறுமங்கல்சிறந்துபொழிந்திடவு
மங்கலகுபேரரெனவர்த்தித்துப்        பொங்கமுடன். (உஉகூரு)

றக்கவதிகாரந்தனைச்சார்ந்தநல்லடிமை
மக்கள்சுற்றம்பொன்மணிநெல்வாகனங்கள் மெய்க்குமிந்த. (உஉகூசு)

வைசுவர்யமெட்டுமடங்காவுவகைதர
வையகத்திற்பெற்றினிதாய்வாழ்கின்றேம் செய்யமலர்ச். (உஉகூஎ)

செந்திருவேயெங்களுடைசெய்திமுற்றுமாதியோ
டந்தமாயுன்பாலறிவித்தேன்        சந்ததமும். (உஉகூஅ)

நெல்லுக்கிறைத்தநீர்வாய்க்கால்வழியோடிப்
புல்லுக்குமாங்கேபுசிதல்போற்        றொல்லுலக. (உஉகூகூ)

## வாழி.

மெங்குஞ்செழிப்புற்றிசையும்புவியரசர்
செங்கோல்தழைத்துச்செயமோங்கித்        தங்கிமலர்ச். (உரு00)

செங்கமலைவாழ்கச்செகமீதறம்பெருகி
மங்களமென்மேலு மிகவாழி.        (உரு0க)

## திருமுகவிலாசம்

முற்றிற்று.

